**கவனிக்க**.-2018.01.05 ஆந் திகதிய இலங்கைச் சனநாயக சோசலிசக் குடியரசு வர்த்தமானியின் பகுதி II பிரசுரிக்கப்படவில்லை.

# ශ්‍රී ලංකා ප්‍රජාතාන්ත්‍රික සමාජවාදී ජනරජයේ ගැසට් පත්‍රය
# இலங்கைச் சனநாயக சோசலிசக் குடியரசு வர்த்தமானப் பத்திரிகை

අංක 2054 - 2018 ජනවාරි මස 12 වැනි සිකුරාදා - 2018.01.12

2054 ஆம் இலக்கம் - 2018 ஆம் ஆண்டு சனவரி மாதம் 12 ஆந் திகதி வெள்ளிக்கிழமை

(அரசாங்கத்தின் அதிகாரத்துடன் பிரசுரிக்கப்பட்டது)

## பகுதி I : தொகுதி (IIஆ) - விளம்பரங்கள்

(ஒவ்வொரு மொழியின் ஒவ்வொரு பகுதியும் வெவ்வேறாக கோவை செய்து வைப்பதற்காகத் தனித்தனிப் பக்கங்கள் தரப்பட்டுள்ளன.)


| | பக்கம் | | பக்கம் |
|---|---|---|---|
| கேள்விப்பத்திர அறிவித்தல்கள் | 56 | உத்தியோகத் தொடர்பற்ற அறிவித்தல்கள் | 56 |
| கேள்விப்பத்திர முடிவுகள் பற்றிய அறிவித்தல்கள் | - | அந்நிய குடிவகை உத்தரவுச்சீட்டு விண்ணப்பங்கள் | - |
| பொருட்கள் விற்பனவும் பிறவும் | - | ஏல விற்பனைகள் | 59 |
| ஆய விற்பனையும் குத்தகையும் | - | நானாவித அறிவித்தல்கள் | - |


**கவனிக்க**.- (i) நிமல் ரூபசிங்ஹ நட்புறவு மன்றம் ( கூட்டிணைத்தல் ) சட்டமூலம் 2018 , சனவரி மாதம் 05 ஆந் திகதிய இலங்கைச் சனநாயக சோசலிசக் குடியரசு வர்த்தமானியின் பகுதி II இற்கு குறைநிரப்பியாக வெளியிடப்படுகின்றது.

(ii) பொத்துவடவன மகா விகாரை மன்றம் ( கூட்டிணைத்தல் ) சட்டமூலம் 2018 , சனவரி மாதம் 05 ஆந் திகதிய இலங்கைச் சனநாயக சோசலிசக் குடியரசு வர்த்தமானியின் பகுதி II இற்கு குறைநிரப்பியாக வெளியிடப்படுகின்றது.

**வாராந்த வர்த்தமானிகளிற் பிரசுரிப்பதற்கான அறிவித்தல்கள் ஏற்றுக்கொள்ளல் சம்பந்தமான**

**முக்கிய அறிவித்தல்கள்**

இலங்கைச் சனநாயக சோசலிசக் குடியரசு வாராந்த வர்த்தமானப் பத்திரிகைகளின் இறுதியில், ஒவ்வொரு மாதத்தின் முதல் வாரத்தின், வாராந்த வர்த்தமானப் பத்திரிகைகளில் பிரசுரிக்கப்படுவதற்கான அறிவித்தல்கள் ஏற்றுக்கொள்ளப்படும் இறுதித் திகதியும் நேரமும் சம்பந்தமான அறிவித்தல்களுக்கு கவனம் கோரப்படுகின்றது.

வாராந்த வர்த்தமானிகளிற் பிரசுரிக்கப்படுவதற்கான அறிவித்தல்கள் ஏற்றுக்கொள்ளப்படும் இறுதித் தினம் அவை **வர்த்தமானியில் பிரசுரமாகும் திகதிக்கு இரண்டு வாரங்களுக்கு முந்திய வெள்ளிக்கிழமை, நண்பகல் 12.00 மணியாகும்**. இறுதித் திகதியும் நேரமும் குறிப்பிடும் அறிவித்தல்களான, பதவி-வெற்றிடங்கள் மற்றும் பரீட்சைகளுக்கு விண்ணப்பம் கோரும் அறிவித்தல்கள், கேள்விப்பத்திர அறிவித்தல்கள் அத்துடன் ஏல விற்பனைத் திகதியும் நேரமும் குறிப்பிடும் அறிவித்தல்கள் என்பன அவ்வவ் அறிவித்தல்களில் உள்ள விடயங்களில் அக்கறை செலுத்துவோர் ஆக்கபூர்வமாக பயனுறும் வகையில் அவை பிரசுரிக்கப்படுவதற்காக அரசாங்க அச்சகத்துக்கு அனுப்பிவைக்கப்படும் திகதியிலிருந்தும் அத்துடன் அவை பிரசுரமாகும் திகதியிலிருந்தும் போதிய கால அவகாசம் கொண்டதாக தயாரிக்கப்பட்டு அனுப்பிவைக்கப்பட வேண்டும் என சகல அரசாங்க திணைக்களங்கள், கூட்டுத்தாபனங்கள், சபைகள் ஆகியன அறிவுறுத்தப்படுகின்றன. அறிவித்தல்கள் தொடர்பிலான பிழைதிருத்தங்கள் சம்பந்தமாக செய்யப்படும் முறைப்பாடுகள் மற்றும் விசாரணைகள் என்பன வர்த்தமானியில் குறிப்பிட்ட அறிவித்தல்கள் பிரசுரமாகிய திகதியிலிருந்து மூன்று மாதங்கள் கழிந்த பின்னர் ஏற்றுக்கொள்ளப்படமாட்டா என்பதனை கவனத்திற்கொள்ளவும்.

வர்த்தமானப் பத்திரிகையில் பிரசுரமாகும் சகல அறிவித்தல்களும், அவை பிரசுரமாகும் திகதிக்கு **இரண்டு வாரங்களுக்கு முன்னர்**, அதாவது 2018, பெப்புருவரி மாதம் 02 ஆந் திகதி வெள்ளிக்கிழமை பிரசுரிக்கப்படவேண்டிய அறிவித்தல்கள் 2018, சனவரி மாதம் 19 ஆந் திகதி நண்பகல் 12.00 மணிக்கு அல்லது அதற்கு முன்னர் கிடைக்கக்கூடியவாறு தபால் மூலம் அல்லது நேரில் சேர்ப்பிக்கப்பட வேண்டும்.

**2006 ஆம் ஆண்டின் 19 ஆம் இலக்க, இலத்திரனியல் கொடுக்கல் வாங்கல் சட்டத்தின் 9 ஆம் பிரிவு**

"ஏதேனும் பிரகடனம், விதி, ஒழுங்கு விதி, கட்டளை, துணை விதி, அறிவிப்பு அல்லது வேறு விடயம் வர்த்தமானியில் வெளியிடப்பட வேண்டுமென ஏதேனும் சட்டம் அல்லது சட்டவாக்கம் ஏற்பாடு செய்யுமிடத்து, அப்போது, அத்தகைய விதி, ஒழுங்குவிதி, கட்டளை, துணை விதி, அறிவிப்பு அல்லது வேறு விடயம் இலத்திரன் வடிவத்தில் வெளியிடப்படின், அத்தகைய தேவைப்பாடு திருப்திப்படுத்தப்பட்டுள்ளதாகக் கருதப்படுதல் வேண்டும்."

**கங்கானி லியனகே,**
அரசாங்க அழுத்தகர் (பதில்).

அரசாங்க அச்சுத் திணைக்களம்,
கொழும்பு 8,
2018 ஆம் ஆண்டு சனவரி மாதம் 01 ஆந் திகதி.
இவ்வர்த்தமானியை www.documents.gov.lk எனும் இணையத்தளத்திலிருந்து பதிவிறக்கம் செய்ய முடியும்.

55- B 81242 - 5403 (2018/01)

# கேள்விப்பத்திர அறிவித்தல்கள்

## மேல் நீதிமன்றம் - திருகோணமலை

அரசுடமையாக்கப்பட்ட மற்றும் உரிமை கோரப்படாத மோட்டார் சைக்கிள்கள் கேள்வி கோரல் மூலம் விற்பனை

திருகோணமலை மேல் நீதிமன்ற வலயத்திற்குட்பட்ட மூதூர் மாவட்ட/ நீதவான் நீதிமன்றினால் அரசுடமையாக்கப்பட்ட மற்றும் உரிமைகோரப்படாத கீழக்காணும் விபரங்களுடைய மோட்டார் சைக்கிள்களை கேள்வி கோரல் மூலம் விற்பனை செய்ய திருகோணமலை மேல் நீதிமன்ற கேள்விச் சபை தீர்மானித்துள்ளது.

விற்பனைக்காக மேற்படி மோட்டார் சைக்கிள்களை 2018.01.16 ஆந் திகதியிலிருந்து மூதூர் மாவட்ட /நீதவான் நீதிமன்றின் அலுவலக நேரத்தில் பதிவாளரின் அனுமதியுடன் பார்வையிடலாம். மேலும் கேள்விப்பத்திரங்களையும் கேள்விக்கான நிபந்தனைகளையும் திருகோணமலை மேல் நீதிமன்றப் பதிவாளரிடம் 2018. 01.16 ஆந் திகதியிலிருந்து பெற்றுக் கொள்ளலாம்.

2018.02.02 ஆந் திகதியன்று கேள்வி கோரல் முடிவுறுத்தப்பட்டு 2018.02.06 ஆந் திகதியன்று பி.ப. 2.00 மணிக்கு கேள்விப்பத்திரங்கள் திறக்கப்படும். மேற்படி கேள்வி கோரல் சம்பந்தமாக மீளச் செலுத்தப்படாத கட்டணமாக ரூ.100 செலுத்தப்பட வேண்டும் என்பதுடன் மீளச் செலுத்தப்படும் கட்டணமும் செலுத்தப்பட வேண்டும்.

திருகோணமலை மேல் நீதிமன்ற அலுவலகத்தில் பெறப்படும் விண்ணப்பப்பத்திரம் தவிர்ந்த ஏனைய விண்ணப்பப்படிவங்களோ போட்டோப் பிரதிகளோ நிராகரிக்கப்படும்.

மோட்டார் சைக்கிள்களின் விபரம்:-

| தொடர் இல. | வழக்கு இல. | வாகனப் பதிவு இல. மற்றும் விபரம் | மீளச்செலுத்தப்படக் கூடிய வைப்பு ரூபா |
|---|---|---|---|
| 1. | எம்.சி. 22706/12 | மோட்டார் சைக்கிள் WU 1797 | 1,000 |
| 2. | எம்.சி. 30747/15 | மோட்டார் சைக்கிள் AAM 1265 | 5,000 |

அன்னலிங்கம் பிரேமசங்கர்,
கிழக்கு மாகாண மேல்நீதிமன்ற நீதிபதி,
தலைவர்.

திருகோணமலை மேல்நீதிமன்ற கேள்விச் சபை,
திருகோணமலை,
2017, திசெம்பர் 08.

1- 275

# உத்தியோகத் தொடர்பற்ற அறிவித்தல்கள்

## பொது அறிவித்தல்

2007 ஆம் ஆண்டின் 7 ஆம் இலக்க கம்பனிகள் சட்டத்தின் 9(1) ஆம் பிரிவின் கீழ்க் குறிப்பிடப்பட்ட கம்பனி 2017 ஆம் ஆண்டு திசெம்பர் மாதம் 12 ஆம் திகதி கூட்டிணைக்கப்பட்டுள்ளது .-

கம்பனியின் பெயர் : கைபோல அன்ட் கபோகா (பிறைவேட்) லிமிட்டட்

கம்பனியின் இலக்கம் : பீவி 126471

பதிவு செய்யப்பட்ட அலுவலகம் : இல. 78, மபமடுல்ல, ஹுலுகம்மான, கண்டி

கம்பனிச் செயலாளர்.

1 -287

## பொது அறிவித்தல்

2007 ஆம் ஆண்டின் 7 ஆம் இலக்க கம்பனிகள் சட்டத்தின் 9(1) ஆம் பிரிவின் கீழ் குறிப்பிடப்பட்ட தனியார் நிறுவனம் 2017 ஆம் ஆண்டு திசெம்பர் மாதம் 15 ஆம் திகதி கூட்டிணைக்கப்பட்டுள்ளது .-

கம்பனியின் பெயர் : ஜாப்பானீஸ் வெஹிகள் இம்போர்ட் சென்டர் (பிறைவேட்) லிமிட்டட்

கம்பனியின் இலக்கம் : பீவி 127385

பதிவு செய்யப்பட்ட அலுவலகம் :இல. 80, தம்மதஸ்ஸி மாவத்தை, கண்டி

கம்பனிச் செயலாளர்.

1 -288

## அறிவித்தல்

*2007 ஆம் ஆண்டின் 7 ஆம் இலக்க கம்பனிகள் சட்டத்தின் 9ஆம் பிரிவின் கீழ் பின்வரும் கம்பனி கூட்டிணைக்கப்பட்டதாக இத்தால் அறிவிக்கப்படுகின்றது.-*

*கம்பனியின் பெயர் :* டிசைன் ஸ்டூடியோ லங்கா (பிறைவெட்) லிமிட்டட்
*பதிவிலக்கம் : பீவீ 126910*
*பதிவு முகவரி :* இல. 47, அலெக்ஸாண்ட்ரா பிளேஸ், கொழும்பு 7
*கூட்டிணைக்கப்பட்ட திகதி : 2017.11.02*

கோர்ப்பரேட் அட்வைசரி சேர்விசஸ் (பிறைவேட்) லிமிட்டட்,
கம்பனிச் செயலாளர்கள்.

*1- 346*

---

## அறிவித்தல்

*2007 ஆம் ஆண்டின் 7 ஆம் இலக்கமுடைய கம்பனிகள் சட்டத்தின் 9 ஆம் பிரிவின் கீழ் பின்வரும் கம்பனி கூட்டிணைக்கப்பட்டதாக இத்தால் அறிவிக்கப்படுகின்றது.-*

*கம்பனியின் பெயர் :*ஸ்குயார் ஃபூட் புரொபட்டீஸ் (பிறைவெட்) லிமிட்டட்
*கம்பனி இலக்கம் : பீவீ 127910*
*பதிவு முகவரி :* 40/4A, கொழும்புதந்திரி மாவத்தை, எத்துல்கோட்டை, ஸ்ரீ ஜயவர்தனபுர, கோட்டை
*கூட்டிணைக்கப்பட்ட திகதி : 2017.12.08*

கே .எம். ஷெஹான்,
கம்பனிச் செயலாளர்.

*1-351*

---

## அறிவித்தல்

*2007 ஆம் ஆண்டின் 7 ஆம் இலக்க கம்பனிகள் சட்டத்தின் 9(1) ஆம் பிரிவின் கீழ், பின்வரும் கம்பனிகள் கூட்டிணைக்கப்பட்டுள்ளதென அறிவிக்கப்படுகின்றது.-*

*கம்பனியின் பெயர் :*முராட் ஹோல்டிங்ஸ் (பிறைவெட்) லிமிட்டட்
*பதிவிலக்கம் : பீவீ 127657*
*கூட்டிணைக்கப்பட்ட திகதி : 2017.11.28*
*பதிவு முகவரி :* இல. 16A, பொதேஜு ஒழுங்கை, தெஹிவளை

*கம்பனியின் பெயர் :*ஈ.எஸ்.ஜீ.கோர்பரேஷன் (பிறைவெட்) லிமிட்டட்
*பதிவிலக்கம் : பீவீ 128039*
*கூட்டிணைக்கப்பட்ட திகதி : 2017.12.13*
*பதிவு முகவரி :* இல. 665,திருகோணமலை வீதி, பல்வெஹற, தம்புள்ளை

ஆர்.கே.ஐ.எஸ். கோப்பரேட் சேர்விசஸ் (பிறைவேட்) லிமிட்டட்
கம்பனிச் செயலாளர்கள்.

*1- 354*

---

## அறிவித்தல்

*2007 ஆம் ஆண்டின் 7 ஆம் இலக்க கம்பனிகள் சட்டத்தின் 9(1) ஆம் பிரிவின் கீழ் பின்வரும் கம்பனி கூட்டிணைக்கப்பட்டுள்ளதென அறிவிக்கப்படுகின்றது.-*

*கம்பனியின் பெயர் :* எபெக் ஹோல்டிங்ஸ் (பிறைவெட்) லிமிட்டட்
*கம்பனியின் பதிவிலக்கம் : பிவி 126679*
*கூட்டிணைக்கப்பட்ட திகதி : 2017.10.26*
*பதிவு அலுவலக முகவரி :* இல. 16S, ஸமர்சைட் கார்டின்ஸ், கல்வர்சாவ வீதி, ஒருவல, அத்துருகிரிய

கம்பனிச் செயலாளர்.

*1- 385*

---

## பொது அறிவித்தல்

*2007 ஆம் ஆண்டின் 7 ஆம் இலக்க கம்பனிகள் சட்டத்தின் 9(1)ஆம் பிரிவின் கீழ் அறிவிக்கப்படுகின்றது.-*

*கம்பனியின் பெயர் :* ஜெம்எக்ஸ்பெஷன்ஸ் (பிறைவெட்) லிமிட்டட்
*பதிவிலக்கம் : பீவீ 124328*
*கூட்டிணைக்கப்பட்ட திகதி : 2017.07.31*
*பதிவு முகவரி : 3 ஆம் மாடி, 3ஏ, தர்மராஜ மாவத்தை,* அல்பிரட் ஹவுஸ் எவனியுக்கப்பால், *கொழும்பு 3*

சபையின் கட்டளைப்படி,

*மனேஜ்மன்ட் அன்ட் பிஸ்னஸ் எட்வைசரி சர்விசஸ் (பிறைவேட்) லிமிட்டட்*
*கம்பனிச் செயலாளர்.*

*1- 393*

## பொது அறிவித்தல்

2007 ஆம் ஆண்டின் 7 ஆம் இலக்க கம்பனிகள் சட்டத்தின் 9(1) ஆம் பிரிவின் கீழ் அறிவிக்கப்படுகின்றது.-

கம்பனியின் பெயர்: ஒப்னிர் லொஜிஸ்டிக்ஸ் (பிறைவெட்) லிமிட்டட்
கம்பனியின் இலக்கம் : பிவி 128048
கூட்டிணைக்கப்பட்ட திகதி : 2017.12.13
பதிவு முகவரி : 35 2/2, அல்பட் பிளேஸ், தெஹிவளை

சபையின் கட்டளைப் பிரகாரம்,

மனேஜ்மன்ட் அன்ட் பிஸ்னஸ் எட்வைசரி
சர்விசஸ் (பிறைவேட்) லிமிட்டட்
கம்பனிச் செயலாளர்.

1-394

---

## பொது அறிவித்தல்

2007 ஆம் ஆண்டின் 7 ஆம் இலக்க கம்பனிகள் சட்டத்தின் 9(1) ஆம் பிரிவின் கீழ் அறிவிக்கப்படுகின்றது-

கம்பனியின் பெயர்: மவ்ரிக்மடுஸ் (பிறைவெட்) லிமிட்டட்
பதிவிலக்கம் : பீவீ 126156
கூட்டிணைக்கப்பட்ட திகதி : 2017.10.06
பதிவு முகவரி : 90, ரெக்லமேஷன் வீதி, கொழும்பு 13

சபைக் கட்டளைப் பிரகாரம்,

மெனேஜ்மன்ட் அன்ட் பிஸினஸ்
எட்வைசரி சர்விசஸ் (பிறைவேட்) லிமிட்டட்
கம்பனிச் செயலாளர்.

1-395

---

## அறிவித்தல்

2007 ஆம் ஆண்டின் 7 ஆம் இலக்க கம்பனிகள் சட்டத்தின் 9(1)ஆம் பிரிவின் கீழ், பின்வரும் கம்பனி கூட்டிணைக்கப்பட்டுள்ளதென அறிவிக்கப்படுகின்றது.-

கம்பனியின் பெயர்: மெடிகார்கோ (பிறைவெட்) லிமிட்டட்
பதிவிலக்கம்.: பிவி 128032
கூட்டிணைப்புத் திகதி : 2017.12.13
பதிவு முகவரி : இல.123/15, சிரிமங்கள வீதி, மாகொள தெற்கு, மாகொள

லிவிக் கோப்பரேட் ஐ
(பிறைவேட்) லிமிட்டட்,
கம்பனிச் செயலாளர்.

1-423

---

## லாப்ஸ் கேஸ் பீஎல்சீ

2007 ஆம் ஆண்டின் 07 ஆம் இலக்க கம்பனிச் சட்டத்தின் 59 (2)ஆம் பிரிவின் கீழ் விடுக்கப்படும் அறிவித்தல்.-

பங்குதாரர்கள் அவர்களின் பங்குகளின் விகிதாசாரத்திற்கேற்ப கம்பனியின் சில முதலீடுகளை கையளிப்பதன் மூலம் தீர்மானிக்கப்பட்ட மூலதனமான மூன்று பில்லியன் இருநூற்று எண்பத்தைந்து மில்லியன் இருநூற்று அறுபது ரூபாவிலிருந்து (ரூபா 3,285, 000, 260) ஒரு பில்லியன் ரூபா (ரூபா 1,000, 000,000) வாக குறைக்க லாப்ஸ் கேஸ் பீஎல்சீ எண்ணியுள்ளது என இத்தால் அறிவித்தல் வழங்கப்படுகிறது. கம்பனியால் வழங்கப்பட்ட பங்குகளின் எண்ணிக்கை மாறாது இருக்கும்.

சபையின் கட்டளைப்படி,

பணிப்பாளர்,

2017, திசெம்பர் 29.

1- 406

---

## அற்றோணித்தத்துவத்தை இரத்துச் செய்தல்

இத்தால் இலங்கைச் சனநாயக சோசலிசக் குடியரசுக்கும் பொது மக்களுக்கும் அறியத்தருவதாவது 2007.10.09 ஆந் திகதியிடப்பட்டு பிரான்ஸ் நாட்டில் இலங்கைத் தூதரகத்தில் துணைத்தூதுவர் எம்.டீ. ஜெகத் குமாரகே முன்னிலையில் சிவசம்பு வீதி, காரைதீவு, 04 ஐச் சேர்ந்த முத்துலிங்கம் வரதராஜன் என்பவரின் பெயரில் சீனா கானா தெரு, காரைதீவு - 05 ஐச் சேர்ந்தவர்களும் தற்போது பிரான்ஸ்சை வசிப்பிடமாகவும் கொண்டவர்களுமான கிருபாரட்ணம் இரட்ணரதி மற்றும் தட்சணாமூர்த்தி நவநீதன் ஆகிய எம்மால் நிறைவேற்றப்பட்ட 16 ஆம் இலக்கப் புத்தகத்தில் 91 ஆம் இதழில் தொடர் இல. 65 இல் 2008.02.29 ஆந்திகதி கிழக்கு வலய மட்டக்களப்பு பதிவாளர் நாயகம் திணைக்களத்தில் பதிவு செய்யப்பட்ட விசேட அற்றோணித் தத்துவப்பத்திரம் 2016.08.17 ஆந் திகதி முதல் மீளப் பெறப்படுவதோடு இரத்துச் செய்யப்படுகிறது. இன்று முதல் அற்றோணித்தத்துவகாரரால் மேற்குறிப்பிட்ட அற்றோணித்தத்துவப் பத்திரத்தின் கீழ் மேற்கொள்ளப்படும் எந்தவொரு செயலுக்கும் நடவடிக்கைகளுக்கும் நாம் பொறுப்பாக மாட்டோம்.

கிருபாரட்ணம் இரட்ணரதி,
தட்சணாமூர்த்தி நவநீதன்.

2016.08.17.

1-271

---

## அற்றோணித்தத்துவப் பத்திரத்தை இரத்துச் செய்தல்

இல. 329/4/1, மந்திரிவத்தை, தளுபொத, நீர்கொழும்பு என்ற முகவரியில் வசிக்கும் தே.அ.அ.இல. 652781438V ஐ உடைய அப்துல் ரஹுமான் அப்துல் அஸீஸ் ஆகிய நான், கனடா

ஒன்டாரியோவில் 2013.01.03 ஆம் திகதி அத்தாட்சிப் படுத்தப்பட்டதும் மஹமுத் அஹமட் பைரூப் அஹமட் என்பவருக்கு வழங்கப்பட்ட அற்றோணித்தத்துவமானது இத்தால் இரத்துச் செய்யப்படுவதாக இலங்கைச் சனநாயக சோசலிசக் குடியரசிற்கும் அதன் பொது மக்களிற்கும் அறிவித்துக் கொள்கின்றேன்.

1- 289

---

### விசேட அற்றோணித்தத்துவப் பத்திரத்தை இரத்துச் செய்தல்

இலக்கம் 71/7, இசிபத்தானராம வீதி, வத்தேகெதற, மஹரகமவைச் சேர்ந்த பஸ்குவல்கே டொன் ஒஸ்வின் ஜயலத் விக்கிரமசிங்கி (662160288 V எனும் இலக்க தேசிய அடையாள அட்டையைக் கொண்டவர்) மற்றும் மலபாகே சிகேரா றேணுகா தனபாலி (696623473V ஏனும் இலக்க தேசிய அடையாள அட்டையைக் கொண்டவர்) ஆகிய நாங்கள் இருவரும் இத்தால், இலங்கைச் சனநாயக சோசலிசக் குடியரசின் அரசாங்கத்திற்கும் பொது மக்களுக்கும் இலக்கம் 42, வட்டமாவத்தை, நாவின்ன, மஹரகமையில் உள்ள பஸ்குவவ்கே தோனா ஹில்டா விக்கிரமசிங்கிக்கு (575710395 V எனும் இலக்க தேசிய அடையாள அட்டையைக் கொண்டவர்) 2015, புரட்டாசி 13 ஆந் திகதியன்று, கொழும்பு பிரசித்த நொத்தாரிசு ஜீவாநந்த வைத்தியதாச என்பவரால் அத்தாட்சிப்படுத்தப்பட்டு 2015.09.22 ஆந் திகதியன்று நுகேகொடை தெல்கந்த எனும் இடத்திலுள்ள உதவிப் பதிவாளர் நாயகம் திணைக்களத்தில் 5384 ஆம் இலக்க தினப்பதிவேட்டில் 168/29 ஆம் தொகுதி- பக்கம் என்பவற்றில் பதியப்பட்டு, வழங்கப்பட்ட அற்றோணித்தத்துவப் பத்திரம் இரத்துச் செய்யப்பட்டு மீளப் பெறப்பட்டு, 2017.12.10ஆந்திகதியிலிருந்து செல்லுபடியற்றதாகிறது என அறியத்தருகின்றோம். மேற்படி விசேட அற்றோணித்தத்துவப் பத்திரத்தின் கீழ் அந்நபரால் மேற்கொள்ளப்படும் எவ்விதமான கொடுக்கல் வாங்கல்களுக்கும் , எச் செயலுக்கும் நாம் பொறுப்பேற்றகமாட்டோம்.

பஸ்குவல்கே டொன் ஒஸ்வின் ஜயலத் விக்கிரமசிங்கி,
மலபாகே சிகேனா ரேணுகா தனபாலி.

1- 352

### அற்றோணித்தத்துவப் பத்திரத்தைமீளப் பெறல்

இத்தால் இலங்கைச் சனநாயக சோசலிசக் குடியரசிற்கும் பொது மக்களுக்கும் அறியத்தருவதாவது 2017.05.31 ஆந் திகதியிடப்பட்டு கொழும்பு, பிரசித்த நொத்தாரிசு சிவதர்ஷினி சிவலிங்கம் முகதாவில் 50 ஆம் இலக்கத்தில் இல. 186, ஸ்ரீ குணானந்த மாவத்தை, கொட்டாஞ்சேனை, கொழும்பு 13 ஐச் சேர்ந்த ஜெயரட்ணம் சசிகுமார் என்பவரின் பெயரில் இல. 82/10 , கீழ்த்தளம், குரக்டேன், 1 ஆம் ஒழுங்கை, ஹேகித்தை வத்தளையைச் சேர்ந்த கருப்பையா சிவரூபன் ஆகிய என்னால் நிறைவேற்றப்பட்ட அற்றோணித்தத்துவப் பத்திரத்திரம் 2017.10.01 ஆந் திகதி முதல் மீளப்பெறப்படுவதோடு இரத்துச் செய்யப்படுகிறது. இன்று முதல் அற்றோணி தத்துவக்காரரால் மேற்குறிப்பிட்ட அற்றோணி தத்துவப் பத்திரத்தின் கீழ் மேற்கொள்ளப்படும் எந்தவொரு செயலுக்கும் நடவடிக்கைக்கும் நான் பொறுப்பாக மாட்டேன் .

கருப்பைய்யா சிவரூபன்.

1- 381

---

### அற்றோணித்தத்துவப் பத்திரத்தை இரத்துச் செய்தல்

இல. 170 /டீ, கேலன்தொட்டு கந்த, கேலன்தொட்டுவ, மஹவில, ஹம்புரகல என்ற முகவரியில் வசிக்கும் லஸன்தி சாருகா தேசப்பிரிய (தே.அ.அ.இல. 756040090V) ஆகிய நான், பிரசித்த நொத்தாரிசு திரு எம். வருண சரித் மிரெண்டு அவர்களினால் 2016.08.10 ஆந் திகதியன்று அத்தாட்சிப்படுத்தப்பட்டதும் , காலி தெற்கு வலய அலுவலகப் பதிவாளர் நாயகத் திணைக்களத்தின் அற்றோணித் தத்துவப் புத்தகத்தில் 71 ஆம் அத்தியாயம் 30 ஆம் பக்கத்தில் தினப்புத்தக இலக்கம் 2089 இன் கீழ் 2016.08.15 ஆம் திகதியன்று பதிவுசெய்யப்பட்டுள்ள 92 ஆம் இலக்க அற்றோணித் தத்துவத்தின் பிரகாரம் ஹம்புருகல, மஹவிலவில் வசிக்கும் களுமுனி மெப்லின் அல்லது களுமுனி ரம்யவதீ என்பவருக்கு வழங்கப்பட்ட அற்றோணித்தத்துவமானது இரத்துச் செய்து இல்லாதொழிக்கப்படுகின்றதெனவும் இதன் பின்னர் என்சார்பில் அவர் மேற்கொள்ளும் நடவடிக்கைகள் செயலிழந்தவையெனக் கொள்ளப்படல் வேண்டுமெனவும் இலங்கைச் சனநாயக சோசலிசக் குடியரசிற்கும் அதன் பொது மக்களுக்கும் இத்தால் அறிவித்துச் கொள்கின்றேன்.

எல்சி . தேசப்பிரிய.

1-405

---

## ஏல விற்பனைகள்

**டீஎப்சீசீ வங்கி பீஎல்சீ**
*(டீஎப்சீசீ வர்தன வங்கி பீஎல்சீயின் பதிலாள்)*

1990 ஆம் ஆண்டின் 4 ஆம் இலக்க வங்கிகளினால் வழங்கப்பட்ட கடன்களை மீள அறவிடுதல் (விசேட ஏற்பாடுகள்) சட்டத்தின் 8 ஆம் பிரிவின் கீழான விற்பனை

**பெறுமதிமிக்க சொத்து ஏல விற்பனை**

**707 ஆம் இலக்க பிணை உறுதி மூலம் அடகு வைக்கப்பட்டுள்ள உடமைகளின் விபரம்**

**மேல் மாகாணம், கம்பஹா மாவட்டம், சியனே கோரளை, அதிகாரி பற்று உடுபில மற்றும் நாரன்விலயில் அமைந்துள்ள ஹொரகஹலந்த எனவும் ஹொரஹேனவத்த எனவும் அழைக்கப்படும் அனுமதிப்பத்திரம் பெற்ற நிலஅளவையாளர் ஏ. ஏ. பீ. ஏ. ரஞ்ஜித் அவர்களால் வரையப்பட்ட 2011 ஆம் ஆண்டு ஒகத்து மாதம் 29 ஆம் திகதியிடப்பட்ட 1876 ஆம்**

**இலக்க வரைபடத்தில் துண்டு A எனக் குறிப்பிடப்பட்டுள்ள பிரிக்கப்பட்டதும், வரையறுக்கப்பட்டதுமான காணித்துண்டு**

**காணியின் விஸ்தீரணம் 0ஏ. 1றூ.20.96 பேர். அதிலுள்ள கட்டிடங்கள் , மரங்கள், தோட்டங்கள் மற்றும் அனைத்தும் அடங்கலாக கம்பஹா காணிப்பதிவகத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது.**

*பிரசித்த நொத்தாரிசு கே.டீ.ஜீ.வீரசிங்க அவர்களால் அத்தாட்சிப் படுத்துப்பட்ட 1998 ஆம் ஆண்டு மாச்சு மாதம் 11 ஆந்திகதியிடப்பட்ட 1397 ஆம் இலக்க வரைபடத்தில் துண்டு 04 மற்றும் 05 எனக் குறிப்பிடப்பட்டுள்ள பிரசித்தநொத்தாரிசு கே. டீ. ஜீ.வீரசிங்க அவர்களால் அத்தாட்சிப்படுத்துப்பட்ட 1998 ஆம் ஆண்டு ஏப்பிறல் மாதம் 02 ஆந் திகதியிடப்பட்ட 1404 ஆம் இலக்க வரைபடத்தில் துண்டு 255, 265 மற்றும் 253 எனக் குறிப்பிடப்பட்டுள்ள காணித்துண்டுகள் ஊடாக செல்லும் பாதை உரிமையுடன்*
*கம்பஹா பிரசித்த நொத்தாரிசு பிரதீப் பீ விக்கிரமதிலக அவர்களால் அத்தாட்சிப்படுத்தப்பட்ட 2011 ஆம் ஆண்டு நவெம்பர் மாதம் 25 ஆம் திகதியிடப்பட்ட 707 ஆம் இலக்க பிணை உறுதி மூலம் கடவத்தையில் 'கடவத்த ஜுஃக்கி சென்டர்' எனும் பெயரில் தனியுரிமைத்துவத்துடன் வியாபாரத்தை நடத்தி வரும் சமிந்த புஷ்பகுமாரசிறி டிலமோட் அவர்களால் டிஎப்சிசி வங்கி பீஎல்சீக்கு ( டிஎப்சிசி வர்தன வங்கி பிஎல்சி யின் பதிலாள்) இற்கு அடகு வைக்கப்பட்டு மீட்கப்படாத சொத்து.*

*டிஎப்சீசீ வங்கி பீஎல்சீ யினால் எமக்களிக்கப்பட்ட அதிகாரத்தின்படி 2018 ஆம் ஆண்டு சனவரி மாதம் 30ஆந் திகதி செவ்வாய்க் கிழமை மு.ப.11.00 மணிக்கு எம்மால் ஸ்தலத்தில் பகிரங்க ஏலவிற்பனைக்கு விடப்படும்.*

**கொடுப்பனவு செய்யும் முறை.-** ஏலவிற்பனையில் வெற்றிபெற்ற கொள்வனவாளர், விற்பனையின் முடிவில் பின்வரும் தொகைகளை ரொக்கப் பணமாகச் செலுத்த வேண்டும் :-

(1) கொள்வனவு செய்யப்பட்ட விலையின் 10% (பத்து சதவீதம்) ;

(2) உள்ளூர் அதிகார சபைக்குச் செலுத்தப்படவேண்டிய விற்பனை வரி 1% (ஒரு சதவீதம்) ;

(3) விற்பனை விலையில் ஏலதாரர் தரகு 2.5% (இரண்டரை சதவீதம்) ;

(4) மொத்த விளம்பரச் செலவு 110,000 ரூபா ;

(5) எழுதுவினைஞர் மற்றும் ஏலம் கூறுவோர் கட்டணம் 1,000 ரூபா;

(6) விற்பனை நிபந்தனைகளுக்கான நொத்தாரிசுக் கட்டணம் 2,000 ரூபா.

கொள்முதல் விலையின் மிகுதி 90% விற்பனையின் பின்னர் 30 நாட்களுக்குள் சட்ட ரீதியான விதிப்பனவுகள், தீர்வைகள், வரிகள் அல்லது இலங்கை அரசாங்கத்தினால் அல்லது வேறு ஏதாவது அதிகார சபையினால் அவ்வப்போது விதிக்கப்படுகின்ற கட்டணங்களுடன் சேர்த்து செலுத்தப்படல் வேண்டும்.

**மேலதிக விபரங்களுக்கு.-** 011-2371371 என்னும் தொலைபேசி இலக்கம் மூலம் டீஎப்சீசீ வங்கியின் பீஎல்சீ சட்டப் பிரிவுடன் தொடர்பு கொள்ளவும்.

'முன்னறிவித்தலின்றி ஏலவிற்பனையை நிறுத்தும்/இரத்துச் செய்யும் அதிகாரம் வங்கிக்குள்ளது.'

சொக்மன் அன்ட் சமரவிக்ரம,
ஒரே நாடு, ஒரே ஏலவிற்பனையாளர்,
125 வருடகால மகோன்னத சேவை.

| தலைமை அலுவலகம் : | நகர அலுவலகமும் காட்சியறையும்: |
|---|---|
| 24, டொரிங்டன் வீதி, கண்டி. | 290, ஹவ்லொக் றோட், கொழும்பு 5. |
| தொலைபேசி : 081-2227593 | தொலைபேசி : 011-2502680 2585408 |
| தொ.பே./ஃபக்ஸ் : 081-2224371 | தொ.பே./ஃபக்ஸ்:011-2588176 |
| மின்-அஞ்சல் : schokmankandy@ sltnet.lk | மின்-அஞ்சல் : schokman@ samera 1892.com |

இணையத்தளம் : www.sandslanka.com

1- 348

---

### டீஎப்சீசீ வங்கி பீஎல்சீ

(டிஎப்சீசீ வர்த்தன வங்கி பீஎல்சீயின் பதிலாள்)

*1990 ஆம் ஆண்டின் 4 ஆம் இலக்க வங்கிகளினால் வழங்கப்பட்ட கடன்களை மீள அறவிடுதல் (விசேட ஏற்பாடுகள்) சட்டத்தின் 8 ஆம் பிரிவின் கீழான விற்பனை*

**பெறுமதிமிக்க சொத்துக்களின் குத்தகை உரிமை பகிரங்க ஏல விற்பனை**

**710 ஆம் இலக்க பிணை உறுதி மூலம் அடகு வைக்கப்பட்ட உடைமைகளின் விபரம்**

**மேல் மாகாணம், கம்பஹா மாவட்டம், சியனே கோரளை , அதிகாரி பற்று உடுபில மற்றும் நாரன்வலயில் அமைந்துள்ள ஹொரகஹலந்த எனவும் ஹொரஹேனவத்த எனவும் அழைக்கப்படும். ( மேற்குறிப்பிட்ட 1404 ஆம் இலக்க வரைபடத்திற்கு அமைய இந்தக் காணி ஹொரகஹலந்த, ஹொரஹேனவத்த மற்றும் மஹரிட்டலந்த எனவும் அழைக்கப்படும்) அனுமதிப்பத்திரம்பெற்ற நிலஅளவையாளர் கே.டீ. ஜீ.வீரசிங்க அவர்களால் வரையப்பட்ட 1998 ஆம் ஆண்டு ஏப்பிறல் மாதம் 11 ஆம் திகதியிடப்பட்ட 1404 ஆம் இலக்க வரைபடத்தில் துண்டு 43 எனக் குறிக்கப்பட்டுள்ள பிரிக்கப்பட்டதும் வரையறுக்கப்பட்டதுமான காணித்துண்டு**

**காணியின் விஸ்தீரணம்: 0ஏ.0றூ.13.60பே. அதிலுள்ள கட்டிடங்கள், மரங்கள், தோட்டங்கள் மற்றும் அனைத்தும் அடங்கலாக, கம்பஹா காணிப்பதிவகத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது.**

**மேல் மாகாணம், கம்பஹா மாவட்டம், சியனே கோரளை, அதிகாரி பற்று உடுபில மற்றும் நாரன்வலயில் அமைந்துள்ள ஹொரகஹலந்த எனவும் ஹொரஹேனவத்த எனவும் அழைக்கப்படும். ( மேற்குறிப்பிடப்பட்ட 1404 ஆம் இலக்க வரைபடத்திற்கு அமைய இந்தக் காணி ஹொரகஹலந்த, ஹொரஹேனவத்த மற்றும் மஹரிட்டலந்த எனவும் அழைக்கப்படும்) அனுமதிப்பத்திரம்பெற்ற நிலஅளவையாளர் கே.டீ. ஜீ.வீரசிங்க அவர்களால் வரையப்பட்ட 1998 ஆம் ஆண்டு ஏப்பிறல் மாதம் 02 ஆம் திகதியிடப்பட்ட 1404 ஆம் இலக்க வரைபடத்தில் துண்டு 265 எனக் குறிக்கப்பட்டுள்ள பிரிக்கப்பட்டதும் வரையறுக்கப்பட்டதுமான காணித்துண்டு**

**காணியின் விஸ்தீரணம்: 0ஏ.03றூ.7.69பே.**

**மேல் மாகாணம், கம்பஹா மாவட்டம், சியனே கோரளை, அதிகாரி பற்று உடுபில மற்றும் நாரன்வலயில் அமைந்துள்ள ஹொரகஹலந்த எனவும் ஹொரஹேனவத்த எனவும் அழைக்கப்படும். ( மேற்குறிப்பிட்ட 1404 ஆம் இலக்க வரைபடத்திற்கு அமைய இந்தக் காணி ஹொரகஹலந்த, ஹொரஹேனவத்த மற்றும் மஹரிட்டலந்த எனவும் அழைக்கப்படும்) அனுமதிப்பத்திரம்பெற்ற நிலஅளவையாளர் கே.டீ. ஜீ.வீரசிங்க அவர்களால் வரையப்பட்ட 1998 ஆம் ஆண்டு ஏப்பிறல் மாதம் 02 ஆம் திகதியிடப்பட்ட 1404 ஆம் இலக்க வரைபடத்தில் துண்டு 267 ( அகழி) எனக் குறிப்பிடப்பட்டுள்ள பிரிக்கப்பட்டதும் வரையறுக் கப்பட்டதுமான காணித்துண்டு**
**காணியின் விஸ்தீரணம்: 0ஏ.0றூ 08.38 பே.**

*கம்பஹா பிரசித்த நொத்தாரிசு பிரதீபா பீ விக்கிரமதிலக அவர்களால் அத்தாட்சிப்படுத்தப்பட்ட 2011 ஆம் ஆண்டு நவெம்பர் மாதம் 25 ஆம் திகதியிடப்பட்ட 710 ஆம் இலக்க பிணை உறுதி மூலம் கடவத்தையில் 'கடவத்த ஜுக்கி சென்டர்' எனும் பெயரில் தனியுரிமைத்துவத்துடன் வியாபாரத்தை நடத்தி வரும் சமிந்த புஷ்ப குமாரசிறி டிலமோட் அவர்களால் டிஎப்சிசி வங்கி பீஎல்சீக்கு ( டிஎப்சிசி வர்தன வங்கி பிஎல்சி யின் பதிலாள்) இற்கு அடகு வைக்கப்பட்டு மீட்கப்படாத சொத்து.*

*டிஎப்சீசீ வங்கி பீஎல்சீயினால் எமக்களிக்கப்பட்ட அதிகாரத்தின்படி 2018 ஆம் ஆண்டு சனவரி மாதம் 30 ஆந் திகதி செவ்வாய்க்கிழமை ந.ப.12.00 மணிக்கு எம்மால் ஸ்தலத்தில் பகிரங்க ஏலவிற்பனைக்கு விடப்படும்.*

**கொடுப்பனவு செய்யும் முறை.-** *ஏலவிற்பனையில் வெற்றிபெற்ற கொள்வனவாளர், விற்பனையின் முடிவில் பின்வரும் தொகைகளை ரொக்கப் பணமாகச் செலுத்த வேண்டும் :-*

*(1) கொள்வனவு செய்யப்பட்ட விலையின் 10% (பத்து சதவீதம்) ;*

*(2) உள்ளூர் அதிகார சபைக்குச் செலுத்தப்படவேண்டிய விற்பனை வரி 1% (ஒரு சதவீதம்) ;*

*(3) விற்பனை விலையில் ஏலதாரர் தரகு 2.5% (இரண்டரை சதவீதம்) மற்றும் அவற்றுக்காக விதிக்கப்படும் சகல வரிகளும்;*

*(4) மொத்த விளம்பரச் செலவு 1,10,000 ரூபா ;*

*(5) எழுதுவினைஞர் மற்றும் ஏலம் கூறுவோர் கட்டணம் 1000 ரூபா;*

*(6) விற்பனை நிபந்தனைகளுக்கான நொத்தாரிசுக் கட்டணம் 2,000 ரூபா.*

*கொள்முதல் விலையின் மிகுதி 90% விற்பனையின் பின்னர் 30 நாட்களுக்குள் சட்ட ரீதியான விதிப்பனவுகள், தீர்வைகள், வரிகள் அல்லது இலங்கை அரசாங்கத்தினால் அல்லது வேறு ஏதாவது அதிகார சபையினால் அவ்வப்போது விதிக்கப்படுகின்ற கட்டணங்களுடன் சேர்த்து செலுத்தப்படல் வேண்டும்.*

**மேலதிக விபரங்களுக்கு.-** *011-2371371 என்னும் தொலைபேசி இலக்கம் மூலம் டீஎப்சீசீ வங்கியின் பீஎல்சீ சட்டப் பிரிவுடன் தொடர்பு கொள்ளவும்.*

*'முன்னறிவித்தலின்றி ஏலவிற்பனையை நிறுத்தும்/இரத்துச் செய்யும் அதிகாரம் வங்கிக்குள்ளது.'*

*சொக்மன் அன்ட் சமரவிக்ரம,
ஒரே நாடு, ஒரே ஏலவிற்பனையாளர்,
125 வருடகால மகோன்னத சேவை.*

*தலைமை அலுவலகம் :
24, டொரிங்டன் வீதி,
கண்டி.*
*தொலைபேசி : 081-2227593*
*தொ.பே./ஃபக்ஸ் : 081-2224371*
*மின்-அஞ்சல் :* schokmankandy@sltnet.lk

*நகர அலுவலகமும் காட்சியறையும்:
290, ஹவ்லொக் றோட்,
கொழும்பு 5.*
*தொலைபேசி : 011-2502680, 2585408*
*தொ.பே./ஃபக்ஸ்:011-2588176*
*மின்-அஞ்சல் :* schokman@samera1892.com

இணையத்தளம் : www.sandslanka.com

*1- 349*

---

**டீஎப்சீசீ வங்கி பீஎல்சீ**

*( டிஎப்சீசீ வர்த்தன வங்கி பீஎல்சீயின் பதிலாள்)*

*1990 ஆம் ஆண்டின் 4 ஆம் இலக்க வங்கிகளினால் வழங்கப்பட்ட கடன்களை மீள அறவிடுதல் (விசேட ஏற்பாடுகள்) சட்டத்தின் 8 ஆம் பிரிவின் கீழான விற்பனை*

**பெறுமதிமிக்க சொத்து பகிரங்க ஏல விற்பனை**

**712 ஆம் இலக்க பிணை உறுதி மூலம் அடகு வைக்கப்பட்ட உடைமைகளின் விபரம்**

**மேல் மாகாணம், கம்பஹா மாவட்டம், சியனே கோரளை, அதிகாரி பற்று உடுபில மற்றும் நாரன்வலயில் அமைந்துள்ள ஹொரகஹலந்த எனவும் ஹொரஹேனவத்த எனவும் அழைக்கப்படும். ( மேற்குறிப்பிட்ட 1404 ஆம் இலக்க வரைபடத்திற்கு அமைய இந்தக் காணி ஹொரகஹலந்த, ஹொரஹேனவத்த மற்றும் மஹரிட்டலந்த எனவும் அழைக்கப்படும்) அனுமதிப்பத்திரம்பெற்ற நிலஅளவையாளர் கே.டீ. ஜீ.வீரசிங்க அவர்களால் வரையப்பட்ட 1998 ஆம் ஆண்டு ஏப்பிறல் மாதம் 02 ஆம் திகதியிடப்பட்ட 1404 ஆம் இலக்க வரைபடத்தில் துண்டு 227 எனக் குறிக்கப்பட்டுள்ள பிரிக்கப்பட்டதும் வரையறுக்கப்பட்டதுமான காணித்துண்டு காணியின் விஸ்தீரணம்: 0ஏ.0றூ.13.96பே. அதிலுள்ள**

**கட்டிடங்கள், மரங்கள், தோட்டங்கள் மற்றும் அனைத்தும் அடங்கலாக, கம்பஹா காணிப்பதிவகத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது.**

**மேல் மாகாணம், கம்பஹா மாவட்டம், சியனே கோரளை , அதிகாரி பற்று உடுபில மற்றும் நாரன்வலயில் அமைந்துள்ள ஹொரகஹலந்த எனவும் ஹொரஹேனவத்த எனவும் அழைக்கப்படும். ( மேற்குறிப்பிட்ட 1404 ஆம் இலக்க வரைபடத்திற்கு அமைந்த இந்தக் காணி ஹொரகஹலந்த, ஹொரஹேனவத்த மற்றும் மஹரிட்டலந்த எனவும் அழைக்கப்படும்) அனுமதிப்பத்திரம்பெற்ற நிலஅளவையாளர் கே.டீ. ஜீ.வீரசிங்க அவர்களால் வரையப்பட்ட 1998 ஆம் ஆண்டு ஏப்பிறல் மாதம் 02 ஆம் திகதியிடப்பட்ட 1404 ஆம் இலக்க வரைபடத்தில் துண்டு 238 எனக் குறிக்கப்பட்டுள்ள பிரிக்கப்பட்டதும் வரையறுக்கப்பட்டதுமான காணித்துண்டு**

**காணியின் விஸ்தீரணம்: 0ஏ.0றூ.31பே. கம்பஹா காணிப்பதிவகத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது.**

**மேல் மாகாணம், கம்பஹா மாவட்டம், சியனே கோரளை , அதிகாரி பற்று உடுபில மற்றும் நாரன்வலயில் அமைந்துள்ள ஹொரகஹலந்த எனவும் ஹொரஹேனவத்த எனவும் அழைக்கப்படும். ( மேற்குறிப்பிட்ட 1404 ஆம் இலக்க வரைபடத்திற்கு அமைய இந்தக் காணி ஹொரகஹலந்த, ஹொரஹேனவத்த மற்றும் மஹரிட்டலந்த எனவும் அழைக்கப்படும்) அனுமதிப்பத்திரம்பெற்ற நிலஅளவையாளர் கே.டீ. ஜீ.வீரசிங்க அவர்களால் வரையப்பட்ட 1998 ஆம் ஆண்டு ஏப்பிறல் மாதம் 02 ஆம் திகதியிடப்பட்ட 1404 ஆம் இலக்க வரைபடத்தில் துண்டு 244 எனக் குறிக்கப்பட்டுள்ள பிரிக்கப்பட்டதும் வரையறுக்கப்பட்டதுமான காணித்துண்டு காணியின் விஸ்தீரணம்: 0ஏ.0றூ 22.03 பே. கம்பஹா காணிப்பதிவகத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது.**

*கம்பஹா பிரசித்த நொத்தாரிசு பிரதீபா பீ விக்கிரமதிலக அவர்களால் அத்தாட்சிப்படுத்தப்பட்ட 2011 ஆம் ஆண்டு நவெம்பர் மாதம் 25 ஆம் திகதியிடப்பட்ட 712 ஆம் இலக்க பிணை உறுதி மூலம் கடவத்தைகயில் 'கடவத்த ஜுக்கி சென்டர்' எனும் பெயரில் தனியுரிமைத்துவத்துடன் வியாபாரத்தை நடத்தி வரும் சமிந்த புஷ்பகுமாரசிறி டிலமோட் அவர்களால் டிஎப்சிசி வங்கி பீஎல்சீக்கு ( டிஎப்சிசி வர்தன வங்கி பிஎல்சி யின் பதிலாள்) இற்கு அடகு வைக்கப்பட்டு மீட்கப்படாத சொத்து.*

டிஎப்சீசீ வங்கி பீஎல்சீயினால் எமக்களிக்கப்பட்ட அதிகாரத்தின்படி 2018 ஆம் ஆண்டு சனவரி மாதம் 30 ஆந் திகதி செவ்வாய்க்கிழமை பி.ப.1.00 மணிக்கு எம்மால் ஸ்தலத்தில் பகிரங்க ஏலவிற்பனைக்கு விடப்படும்.

**கொடுப்பனவு செய்யும் முறை**.- ஏலவிற்பனையில் வெற்றிபெற்ற கொள்வனவாளர், விற்பனையின் முடிவில் பின்வரும் தொகைகளை ரொக்கப் பணமாகச் செலுத்த வேண்டும் :-

(1) கொள்வனவு செய்யப்பட்ட விலையின் 10% (பத்து சதவீதம்) ;

(2) உள்ளூர் அதிகார சபைக்குச் செலுத்தப்படவேண்டிய விற்பனை வரி 1% (ஒரு சதவீதம்) ;

(3) விற்பனை விலையில் ஏலதாரர் தரகு 2.5% (இரண்டரை சதவீதம்) மற்றும் அவற்றுக்காக விதிக்கப்படும் சகல வரிகளும்;

(4) மொத்த விளம்பரச் செலவு 1,23,000 ரூபா ;

(5) எழுதுவினைஞர் மற்றும் ஏலம் கூறுவோர் கட்டணம் 1000 ரூபா;

(6) விற்பனை நிபந்தனைகளுக்கான நொத்தாரிசுக் கட்டணம் 2,000 ரூபா.

கொள்முதல் விலையின் மிகுதி 90% விற்பனையின் பின்னர் 30 நாட்களுக்குள் சட்ட ரீதியான விதிப்பனவுகள், தீர்வைகள், வரிகள் அல்லது இலங்கை அரசாங்கத்தினால் அல்லது வேறு ஏதாவது அதிகார சபையினால் அவ்வப்போது விதிக்கப்படுகின்ற கட்டணங்களுடன் சேர்த்து செலுத்தப்படல் வேண்டும்.

**மேலதிக விபரங்களுக்கு**.- 011-2371371 என்னும் தொலைபேசி இலக்கம் மூலம் டீஎப்சீசீ வங்கியின் பீஎல்சீ சட்டப் பிரிவுடன் தொடர்பு கொள்ளவும்.

'முன்னறிவித்தலின்றி ஏலவிற்பனையை நிறுத்தும்/இரத்துச் செய்யும் அதிகாரம் வங்கிக்குள்ளது.'

சொக்மன் அன்ட் சமரவிக்ரம,
ஒரே நாடு, ஒரே ஏலவிற்பனையாளர்,
125 வருடகால மகோன்னத சேவை.

| தலைமை அலுவலகம் : | நகர அலுவலகமும் காட்சியறையும்: |
|---|---|
| 24, டொரிங்டன் வீதி, கண்டி. | 290, ஹவ்லொக் றோட், கொழும்பு 5. |
| தொலைபேசி : 081-2227593 | தொலைபேசி : 011-2502680 2585408 |
| தொ.பே./ஃபக்ஸ் : 081-2224371 | தொ.பே./ஃபக்ஸ்:011-2588176 |
| மின்-அஞ்சல் : schokmankandy@ sltnet.lk | மின்-அஞ்சல் : schokman@ samera 1892.com |

இணையத்தளம் : www.sandslanka.com

1- 350

---

## இலங்கை வங்கி

*1968 ஆம் ஆண்டின் 34 ஆம் இலக்கச் சட்டத்தாலும் 1974 ஆம் ஆண்டின் 10 ஆம் இலக்கச் சட்டத்தாலும் திருத்தப்பட்டவாறான இலங்கை வங்கி கட்டளைச் சட்டத்தின் (397 ஆம் அத்தியாயம்) 22ஆம் பிரிவினதும் அதன் திருத்தங்களினதும் கீழ் விற்பனை அறிவித்தல்*

*கடன் தொடர்பு இல.80204235, நடைமுறைக்கணக்கு இல. 79723932.*

*கொழும்பு 13, ஜெம்பட்டா வீதி, இல. 190/2 என்னும் முகவரியைச் சேர்ந்த திரு. சிதம்பரம் சங்கரன் ஈடுவைத்த ஆதனத்தின் விற்பனை.*

*இலங்கை வங்கி கட்டளைச் சட்டம் 19ஆம் பிரிவின் கீழ் இலங்கை வங்கி பணிப்பாளர்கள் சபை எடுத்த தீர்மானத்துக்கமைய இலங்கைச் சனநாயக சோசலிசக் குடியரசின் 2017.11.24 ஆம்*

திகதிய 2047 ஆம் இலக்க வர்த்தமானியிலும் 2017.11.15 ஆந் திகதிய "டெய்லி நியூஸ்", "தினகரன்", "தினமின" ஆகிய பத்திரிகைகளிலும் வெளியிடப்பட்ட அறிவித்தல்களுக்கமைய நிலுவை முதலையும் விற்பனைத் திகதி வரை வருமதியாக உள்ள வட்டியையும் மேற்குறிப்பிட்ட கட்டளைச்சட்டத்தின் பிரிவு 26 இன் கீழ் அறவிட வேண்டிய செலவு மற்றும் பணங்களையும் அறவிடும் பொருட்டு இங்கு கீழ் அட்டவணையில் விபரித்த சொத்தையும் நிலமனையையும் இல.50/3,விஹார மாவத்தை, கொலன்னாவ என்னும் முகவரியைச் சேர்ந்த T&H ஒக்ஷன்ஸ் ஏல நிறுவனத்தின் ஏலதாரர் திரு. துசித்த கருணாரத்ன அவர்கள் 2018.01.30ஆந் திகதி மு.ப.10.30 மணிக்கு அதே இடத்தில் வைத்து பகிரங்க ஏலத்தில் விற்பனை செய்வாரென இத்தால் அறிவிக்கப்படுகின்றது.

### அட்டவணை

மேல்மாகாணம், கம்பஹா மாவட்டம், அலுத்துரு கோரளை ராகம் பற்றுவில் வத்தளை பிரதேச செயலகப்பிரிவு மற்றும் பிரதேச சபை எல்லைகளுள் ஹெந்தல – வடக்கு, 172-A ஆம் இலக்க கிராம அலுவலர் பிரிவில் ஹெந்தலயில் அமைந்த எட்டம்பொலவத்த வீதிக்கு அருகில் எட்டம்பொலவத்த வீதி நெடுகவும் அமைந்த எட்டம்பொலவத்த வீதி வரிமதிப்பிலக்கம் 108/14ஐக் கொண்ட "எட்டம்பொலவத்த" என அழைக்கப்படும் காணியின் உத்தரவு பெற்ற நில அளவையாளர் கே. கனகசிங்கம் தயாரித்த 18.08.2012 ஆந் திகதியிட்ட வரைபட இல. 2651 இல் விபரித்த துண்டு X என அடையாளமிட்ட பிரிக்கப்பட்ட குறித்த காணித்துண்டு - வடக்கு : எட்டம்பொலவத்த வீதி, வரிமதிப்பிலக்கம் 108 ஐக் கொண்ட உத்தரவு பெற்ற நில அளவையாளர் ஏ. டபிள்யூ. திலகரத்ன தயாரித்த 15.06.1989 ஆந் திகதியிட்ட வரைபட இல. 104A இல் துண்டு 297 உம் ; கிழக்கு : உத்தரவுபெற்ற நிலஅளவையாளர் ஏ. டபிள்யூ. திலகரத்ன தயாரித்த 1989.0615 ஆந் திகதியிட்ட வரைபட இல. 104 A இல் (30 அடி) அகலமுள்ள 9.15 மீட்டர் பாதை) துண்டு 290 மற்றும் (கால்வாய்) துண்டு 302 உம்; தெற்கு: உத்தரவு பெற்ற நில அளவையாளர் ஏ. டபிள்யூ. திலகரத்ன தயாரித்த 15.06.1989 ஆந் திகதியிட்ட அளவை வரைபட இல. 104A இல் எட்டம்பொலவத்த வீதி, வரிமதிப்பிலக்கம் 102 ஐக் கொண்ட (கால்வாய்) துண்டு 302 மற்றும் துண்டு 296 உம்; மேற்கு : எட்டம்பொலவத்த வீதி, வரிமதிப்பிலக்கங்கள் 102 மற்றும் 108ஐக் கொண்ட உத்தரவு பெற்ற நில அளவையாளர் ஏ. டபிள்யூ. திலகரத்ன தயாரித்த 15.06.1989 ஆந் திகதியிட்ட வரைபட இல. 104A இல் துண்டுகள் 296 மற்றும் 297 உம் எல்லைகளாகக் கொண்டு மேற்குறிப்பிட்ட வரைபட இல. 2651 இன் படி மூன்று றூட் முப்பத்து நான்கு பேர்ச் (0ஏ. 3றூ. 34பே.) அல்லது ஹெக்டெயர் சைபர் தசம் மூன்று எட்டு ஒன்பது ஐந்து ஒன்று சைபர் (ஹெக்டெயர் 0.389510) விஸ்தீரணமுடைய காணியும் அங்கு அமைந்துள்ள மண், கட்டிடங்கள், மரங்கள், பயிர்கள் மற்றும் சகலதும் ஆகும். இது கம்பஹா காணிப்பதிவகத்தில் L 274/ 36 இல் பதிவு செய்யப்பட்டுள்ளது.

### இரண்டாவது அட்டவணை

மேல்மாகாணம், கம்பஹா மாவட்டம், அலுத்துரு கோரளை ராகமபற்றுவில் வத்தளை பிரதேச செயலகப் பிரிவு மற்றும் பிரதேசசபை எல்லைகளுள் ஹெந்தல – வடக்கு, 172-A ஆம் இலக்க கிராம அலுவலர் பிரிவில் மாபோல வத்தள பட்டினசபை எல்லைகளுள் மாபோல வாட் இல.1 இல் அமைந்த "பகினிகஹவெல அல்லது தெவட்டகஹ அல்லது தெல்துவ கும்புர தற்போது பங்களாவத்த" என அழைக்கப்படும் காணியின் உத்தரவு பெற்ற நில அளவையாளர் கே. பாலசுந்தரம் தயாரித்த 16.11.1980 ஆந் திகதியிட்ட வரைபட இல. 53/1980 இல் (30 அடி அகல பாதை ஒதுக்கம்) துண்டு 2 என அடையாளமிட்ட பிரிக்கப்பட்ட குறித்த காணித்துண்டு - வடக்கு : மாபொல PPA 4413/1 அரச பாடசாலையும் நீர்கொழும்பு வீதி, அதே காணியின் மீதிப்பாகம் வரிமதிப்பிலக்கங்கள் 775/1 மற்றும் 775/5 (பகுதிகள்) உம்; கிழக்கு: நீர்கொழும்பு வீதியும் அதே காணியின் மீதிப்பாகம் வரிமதிப்பிலக்கம் 775/1 (பகுதி)யும், நீர்கொழும்பு வீதியும்; தெற்கு : உத்தரவு பெற்ற நில அளவையாளர் எச். ராஜபக்ஷ தயாரித்த 14.06.1979 ஆந் திகதியிட்ட வரைபட இல. 79/08 இல் துண்டு 1 மற்றும் நீர்கொழும்பு வீதியும், வரிமதிப்பிலக்கம் 775/1 ஐக் கொண்ட நிலமனைகளும்; மேற்கு : உத்தரவு பெற்ற நில அளவையாளர் கே. பாலசுந்தரம் தயாரித்த 16.08.1980 ஆந் திகதியிட்ட வரைபட இல. 52/1980 இல் துண்டு 1 மற்றும் அதன் துண்டு 1 உம் எல்லைகளாகக் கொண்டு மேற்குறிப்பிட்ட வரைபடம் இல53/1980 இன் படி ஒரு ஏக்கர் (1ஏ. 0றூ. 0பே.) விஸ்தீரணமுடைய காணியும் அங்கு அமைந்துள்ள சகலதும் ஆகும். இது கம்பஹா காணிப் பதிவகத்தில் L 78/50ல் பதிவுசெய்யப்பட்டுள்ளது

மேற்குறிப்பிட்ட மாபோலயில் அமைந்த "பகினிகஹவெல அல்லது தெவட்டகஹ அல்லது தெல்துவ கும்புர தற்போது பங்களாவத்த" என அழைக்கப்படும் காணியின் உத்தரவு பெற்ற நில அளவையாளர் ஏ. டபிள்யூ. திலகரத்ன தயாரித்த 20.09.1988 ஆந் திகதியிட்ட வரைபட இல.108ல் (40 அடி அகல பாதை ஒதுக்கம்) துண்டு A என அடையாளமிட்ட பிரிக்கப்பட்ட குறித்த காணித்துண்டு - வடக்கு : ஈ. சீ. குணதிலக்கவின் அதே காணியின் மீதிப்பாகமும்; கிழக்கு : (வரைபட இல.53/1980 இல் துண்டு 2) 30 அடி அகலப் பாதையும்; தெற்கில் : துண்டு B உம்; மேற்கு : நீர்கொழும்பு கால்வாயும் எல்லைகளாகக் கொண்டு மேற்குறிப்பிட்ட வரைபட இல. 108 இன் படி ஒரு றூட் பதின்நான்கு பேர்ச் (0ஏ. 1றூ. 14பே.) விஸ்தீரணமுடைய காணியும் அங்கு அமைந்துள்ள சகலதும் ஆகும். இது கம்பஹா காணிப்பதிவகத்தில் L 78/31ல் பதிவு செய்யப்பட் டுள்ளது

மேல்மாகாணம், கம்பஹா மாவட்டம், அலுத்துரு கோரளை ராகமபற்றுவில் வத்தளை பிரதேச செயலாளர் பிரிவு மற்றும் பிரதேசசபை எல்லைகளுள் ஹெந்தல – வடக்கு, 172-A ஆம் இலக்க கிராம அலுவலர் பிரிவில் கம்பஹா D.C. ஹெந்தல உப அலுவலகம் இல. 2D இல் கெரவலபிட்டிய மற்றும் ஹெந்தல கிராமங்களில் "மாகம்மனமுலவத்தயின் துண்டு 1 மற்றும் எட்டம்பொலவத்தயின் துண்டு 1" என அழைக்கப்படும் காணியின் உத்தரவு பெற்ற நில அளவையாளர் ஏ. டபிள்யூ. திலகரத்ன தயாரித்த 15.06.1989 ஆந் திகதியிட்ட அளவை வரைபட இல.104A இல் (30 தொடக்கம் 40 அடி வரை அகலமுள்ள ஒதுக்கப்பட்ட பாதை) துண்டு 37 என அடையாளமிட்ட பிரிக்கப்பட்ட குறித்த காணித்துண்டு - வடக்கு : துண்டுகள் 26, 14, 246 தொடக்கம் 252, 281 மற்றும் 286 உம் ; கிழக்கு: பழைய நீர்கொழும்பு வீதி, துண்டுகள் 282 மற்றும் 283 உம் ; தெற்கு : துண்டுகள் 286, 282, 283, 237, 234, 233, 230, 229, 226, 225,38,

39, 40, 41, 42 மற்றும் 43 உம் ; மேற்கு: துண்டுகள் 218, 238, 237 மற்றும் 145 உம் எல்லைகளாகக் கொண்டு மேற்குறிப்பிட்ட வரைபட இல. 104/A இன் படி ஒரு ஏக்கர் ஐந்து பேர்ச் (1ஏ. 0றூ. 5பே.) விஸ்தீரணமுடைய காணியும் அங்கு அமைந்துள்ள சகலதும் ஆகும். இது கம்பஹா காணிப்பதிவகத்தில் L 78/ 32 இல் பதிவு செய்யப்பட்டுள்ளது

மேற்குறிப்பிட்டவாறு கெரவலபிட்டிய மற்றும் ஹெந்தல கிராமங்களில் "மாகம்மனமுலவத்தயின் துண்டு 1 மற்றும் எட்டம்பொலவத்தயின் துண்டு 1" என அழைக்கப்படும் காணியின் அளவை வரைபட இல.104A இல் (10 அடி அகல பாதை ஒதுக்கம்) துண்டு 283 என அடையாளமிட்ட பிரிக்கப்பட்ட குறித்த காணித்துண்டு - வடக்கு : துண்டுகள் 207, 208, 209, 215, 216, 245, 218, 37 மற்றும் 282 உம் ; கிழக்கு : துண்டு 286 உம் ; தெற்கு : துண்டு 284 உம்; மேற்கு மாகம்மனமுலவத்தயின் துண்டு 2 உம் எல்லைகளாகக் கொண்டு மேற்குறிப்பிட்ட வரைபட இல. 104/A இன் படி ஒரு றூட் பதினைந்து பேர்ச் (0ஏ. 1றூ. 15பே.) விஸ்தீரணமுடைய காணியும் அங்கு அமைந்துள்ள சகலதும் ஆகும். இது கம்பஹா காணிப் பதிவகத்தில் L 78/33 ல் பதிவு செய்யப் பட்டுள்ளது

மேற்குறிப்பிட்டவாறு கெரவலபிட்டிய மற்றும் ஹெந்தல கிராமங்களில் "மாகம்மனமுலவத்தயின் துண்டு 1 மற்றும் எட்டம்பொலவத்தயின் துண்டு 1" என அழைக்கப்படும் காணியின் வரைபட இல.104A இல் (10 அடி அகலம் ஒதுக்கப் பட்டது) துண்டு 285 என அடையாளமிட்ட பிரிக்கப்பட்ட குறித்த காணித்துண்டு - வடக்கு : துண்டுகள் 284 உம்; கிழக்கு : துண்டு 286 உம்; தெற்கு : துண்டு 287, 290, 288, 289, 291, 292 மற்றும் 293ம்;மேற்கு : முன்னர் கே. சீதாலெட்சுமியினதும் தற்போது பீ. ஆர். ரத்நாயக்க மற்றும் ஏனையோர்களினதும் மெதஒலுவாவே வெல்யாயயும் எல்லைகளாகக் கொண்டு மேற்குறிப்பிட்ட வரைபட இல. 104/Aன் படி ஒரு றூட் இருபத்தெட்டு தசம் ஒரு பேர்ச் (0ஏ. 1றூ. 28.1பே.) விஸ்தீரணமுடைய காணியும் அங்கு அமைந்துள்ள சகலதும் ஆகும். இது கம்பஹா காணிப்பதிவகத்தில் L 78/79 இல் பதிவு செய்யப்பட்டுள்ளது

மேற்குறிப்பிட்டவாறு கெரவலபிட்டிய மற்றும் ஹெந்தல கிராமங்களில் "மாகம்மனமுலவத்தயின் துண்டு 1 மற்றும் எட்டம்பொலவத்தயின் துண்டு 1" என அழைக்கப்படும் காணியின் அளவை வரைபட இல.104Aல் (30 அடி அகல ஒதுக்கம்) துண்டு 290 என அடையாளமிட்ட பிரிக்கப்பட்ட குறித்த காணித்துண்டு - வடக்கு : உத்தரவு பெற்ற நில அளவையாளர் எம். டி. ஜே. வீ. பெரேரா தயாரித்த வரைபட இல. 10054A இல் அதே காணியின் பகுதியும் துண்டுகள் 293, 292, 294, 295, 291 289, 288 மற்றும் 285 கிழக்கு : துண்டுகள் 287, 289, 298, 300, 302, 304,305மற்றும் 294 உம் ; தெற்கு: துண்டுகள் 299, 298, 305, 297, 296, மற்றும் உத்தரவு பெற்ற நில அளவையாளர் எம். டி. ஜே. வீ. பெரேரா தயாரித்த வரைபட இல. 8772 இல் விபரித்த அதே காணியின் பாகமும் ; மேற்கு : (20 அடி அகலப்பாதை) துண்டுகள் 288, 303, 302, 301, 297 உத்தரவு பெற்ற நில அளவையாளர் எம். டி. ஜே. வீ. பெரேரா தயாரித்த மேற்குறிப்பிட்ட வரைபட இல. 10054A இல் விபரித்த அதே காணியின் பாகம் துண்டு 295 உம் எல்லைகளாகக் கொண்டு மேற்குறிப்பிட்ட வரைபட இல. 104/A இன் படி இரண்டு ஏக்கர் ஒரு றூட் மூன்று பேர்ச் (2ஏ. 1றூ. 3பே.) விஸ்தீரணமுடைய காணியும் அங்கு அமைந்துள்ள சகலதும் ஆகும். இது கம்பஹா காணிப்பதிவகத்தில் L 78/80ல் பதிவுசெய்யப்பட்டுள்ளது

அத்துடன் வரைபடம் CO/2207/LRC/CO/3043/CO/1இல் விபரித்த பாதை மீதான வழி உரிமையும் ஆகும்.

இலங்கை வங்கிப் பணிப்பாளர் சபையின் கட்டளைப்படி,

(திருமதி) எச். பீ. ஆர். பத்திரண,
முகாமையாளர்.

இலங்கை வங்கி
கிரேண்ட்பாஸ் கிளை

1-396

---

## இலங்கை வங்கி

*1968 ஆம் ஆண்டின் 34 ஆம் இலக்கச் சட்டத்தாலும் 1974 ஆம் ஆண்டின் 10 ஆம் இலக்கச் சட்டத்தாலும் திருத்தப்பட்டவாறான இலங்கை வங்கி கட்டளைச் சட்டத்தின் (397 ஆம் அத்தியாயம்) 22ஆம் பிரிவினதும் அதன் திருத்தங்களினதும் கீழ் விற்பனை அறிவித்தல்*

கடன் தொடர்பு இல.73849555.

வத்தளை, ஹெந்தளை, நாயககந்த, கிறிஸ்தவ தேவாலய வீதி, இல. 12/ 7 என்னும் முகவரியைச் சேர்ந்த திரு. நாகராஜா நேசராசா சூசைப்பிள்ளை ஈடுவைத்த ஆதனத்தின் விற்பனை.

இலங்கை வங்கிக் கட்டளைச் சட்டம் 19ஆம் பிரிவின் கீழ் இலங்கை வங்கி பணிப்பாளர்கள் சபை எடுத்த தீர்மானத்துக்கமைய இலங்கைச் சனநாயக சோசலிசக் குடியரசின் 2017.01.06 ஆம் திகதிய 2001 ஆம் இலக்க வர்த்தமானியிலும் 2016.12.29 ஆந் திகதிய "டெய்லி நியூஸ்", "தினகரன்", "தினமின" ஆகிய பத்திரிகைகளிலும் வெளியிடப்பட்ட அறிவித்தல்களுக்கமைய நிலுவை முதலையும் விற்பனைத் திகதி வரை வருமதியாக உள்ள வட்டியையும் மேற்குறிப்பிட்ட கட்டளைச்சட்டத்தின் பிரிவு 26 இன் கீழ் அறவிட வேண்டிய செலவு மற்றும் பணங்களையும் அறவிடும் பொருட்டு இங்கு கீழ் அட்டவணையில் விபரித்த சொத்தையும் நிலமனையையும் இல.50/3,விஹார மாவத்தை, கொலன்னாவ என்னும் முகவரியைச் சேர்ந்த திருவாளர்கள் T&H ஒக்ஷன்ஸ் ஏல நிறுவனத்தின் ஏலதாரர் திரு. துசித்த கருணாரத்ன அவர்கள் 2018.02.15ஆந் திததி மு. ப.10.30 மணிக்கு அதே இடத்தில் வைத்து பகிரங்க ஏலத்தில் விற்பனை செய்வாரென இத்தால் அறிவிக்கப்படுகின்றது.

### முதலாம் அட்டவணை

மேல் மாகாணம், கம்பஹா மாவட்டம், அலுத்குரு கோரளை தெற்கு, ராகம் பற்றுவில் ஹெந்தல கிராம அலுவலர் பிரிவில் வத்தளை

(ஹெந்தல உப அலுவலகம்) பிரதேச சபை எல்லைகளுக்குள் ஹெந்தலையில் அமைந்த கிறிஸ்தவ ஆலய வீதி, வரிமதிப்பிலக்கம் 12/7C ஐக் கொண்ட (உறுதியின் பிரகாரம் ஹெந்தலயில் கிறிஸ்தவ ஆலய வீதி நெடுக அமைந்த) "தெல்கஹவத்த அல்லது நோர்வின்ஸ் சதுக்கம்'' என அழைக்கப்படும் காணியின் உத்தரவுபெற்ற நிலஅளவையாளர் ஹியு ஆர். சமரசிங்ஹ தயாரித்த 2003.09.25ஆந் திகதியிட்ட வரைபடம் இல. 3800 இல் விபரித்த உத்தரவுபெற்ற நிலஅளவையாளர் ஹியு ஆர். சமரசிங்ஹ தயாரித்த 2004.04.10ஆந் திகதியிட்ட புறக்குறிப்பு மற்றும் உப பிரிவின் பிரகாரம் துண்டு 1A என அடையாளமிட்ட பிரிக்கப்பட்ட குறித்த காணித்துண்டு வடக்கு: வீதியும் ; கிழக்கு : உத்தரவுபெற்ற நிலஅளவையாளர் பீ. பீலிக்ஸ் டயஸ் தயாரித்த 1993.07.09 ஆந் திகதியிட்ட வரைபடம் இல. 585 இல் துண்டு 2B உம் ; தெற்கு : துண்டு 1B உம் ; மேற்கு : உத்தரவுபெற்ற நிலஅளவையாளர் ரீ. அமரசிங்ஹ தயாரித்த வரைபடம் இல. 272 இல் துண்டு 1 உம் எல்லைகளாகக் கொண்டு மேற்குறிப்பிட்ட வரைபடம் இல. 3800 இன் படி ஆறு தசம் ஒன்பது இரண்டு பேர்ச்சுகள் (0ஏ. 0றூ. 6.92பே.) விஸ்தீரணமுடைய காணியும் அங்கு அமைந்துள்ள கட்டிடங்கள், மரங்கள், பயிர்கள் மற்றும் சகலதும் ஆகும். இது கொழும்பு காணிப்பதிவகத்தில் B 943/01 இல் பதிவு செய்யப்பட்டுள்ளது.

### இரண்டாம் அட்டவணை

மேற்குறிப்பிட்ட ஹெந்தலையில் கிறிஸ்தவ ஆலய வீதியில் அமைந்த "தெல்கஹவத்த அல்லது நோர்வின்ஸ் சதுக்கம்'' என அழைக்கப்படும் காணியின் உத்தரவுபெற்ற நிலஅளவையாளர் பீ. பீலிக்ஸ் டயஸ் தயாரித்த 1993.07.09 ஆந் திகதியிட்ட வரைபடம் இல. 585 இல் (பாதைக்கு ஒதுக்கப்பட்டது) விபரித்த துண்டு 2B என அடையாளமிட்ட பிரிக்கப்பட்ட குறித்த காணித்துண்டு வடக்கு : உத்தரவுபெற்ற நிலஅளவையாளர் பீ. எப். குணசேகர தயாரித்த 1941.03.08 ஆந் திகதியிட்ட மேற்குறிப்பிட்ட வரைபடம் இல. 1886 இல் விபரித்த (பாதைக்கு ஒதுக்கப்பட்டது) துண்டு J உம் ; கிழக்கு: சென்ட் மேரியுடைய வீதி, நிலமனை இலக்கங்கள் 12/5 மற்றும் நாயக்ககந்த வீதி, 215/2 உம் ; தெற்கு : மேற்குறிப்பிட்ட வரைபடம் இல. 585 இல் துண்டு 2C உம் ; மேற்கு : மேற்குறிப்பிட்ட வரைபடம் இல. 585 இல் துண்டு 2A உம் எல்லைகளாகக் கொண்டு மேற்குறிப்பிட்ட வரைபடம் இல. 585 இன் படி ஐந்து தசம் ஐந்து சைபர் பேர்ச்சுகள் (0ஏ. 0றூ. 5.50பே.) விஸ்தீரணமுடையதாகும். இது கொழும்பு காணிப்பதிவகத்தில் B 918/ 21 இல் பதிவு செய்யப்பட்டுள்ளது.

மேற்குறிப்பிட்ட ஹெந்தலையில் கிறிஸ்தவ ஆலய வீதியில் அமைந்த "தெல்கஹவத்த அல்லது நோர்வின்ஸ் சதுக்கம்'' என அழைக்கப்படும் காணியின் உத்தரவுபெற்ற நிலஅளவையாளர் பீ. எப். குணசேகர தயாரித்த 1941.03.08 ஆந் திகதியிட்ட வரைபடம் இல. 1886 இல் விபரித்த (20 அடி அகலமான பாதைக்கு ஒதுக்கப்பட்டது) துண்டு J என அடையாளமிட்ட பிரிக்கப்பட்ட குறித்த காணித்துண்டுகள் - வடக்கு : துண்டுகள் B, F மற்றும் G ; கிழக்கு : துண்டு G உம், ; தெற்கு : துண்டுகள் C, H மற்றும் I உம் ; மேற்கு : கெரவலபிட்டிய வீதியும் எல்லைகளாகக் கொண்டு மேற்குறிப்பிட்ட வரைபடம் இல. 1886 இன் படி பதின்மூன்று பேர்ச்சு (0ஏ. 0றூ. 13பே.) விஸ்தீரணமுடையது. இது கொழும்பு காணிப்பதிவகத்தில் B 918/22 இல் பதிவு செய்யப்பட்டுள்ளது.

இலங்கை வங்கிப் பணிப்பாளர் சபையின் கட்டளைப்படி,

(திருமதி) பி.எம். விதான ஆரச்சி,
முகாமையாளர் ( 5ஆவது நகரக் கிளை).

இலங்கை வங்கி,
ஐந்தாம் நகரக் கிளை,

1-398

---

### ஹற்றன் நஷனல் வங்கி பீஎல்சீ — கேகாலை கிளை

(முன்பு ஹற்றன் நஷனல் வங்கி லிமிட்டட் என அழைக்கப்பட்டது)

1990 ஆம் ஆண்டின் 4 ஆம் இலக்க வங்கிகளினால் வழங்கப்பட்ட கடன்களை மீள அறவிடுதல் (விசேட ஏற்பாடுகள்) சட்டத்தின் 4 ஆம் பிரிவின்கீழ் பெறுமதி மிக்க ஆதனம் பகிரங்க ஏல விற்பனை

**கடன் எடுத்த வெடிக்காரகே ஜானக பிரசாத் எமன்த மற்றும் உபாலி பதிரன்னலாகே தில்ரக்சிக்கா சன்ஜீவனீ பத்திரன அல்லது உபாலி பதிரன்னகே தில்குக்சி சன்ஜீவனி பதிரன்ன என்பவர்கள் ஹற்றன் நஷனல் வங்கி பீஎல்சீ சார்பாக குருநாகல் பிரசித்த நொத்தாரிசு என். எஸ்.ஏவ பதிரன்னவின் 2015.07.28ஆந் திகதியுடைய ஈட்டு முறி இலக்கம் 4171 இன் மூலம் செலுத்த வேண்டிய கொடுப்பனவில் தவறுகை புரிந்துள்ளதாதலாலும் அத்துடன் மிகுதி முற்பணமும் வட்டியும் ஏலதாரரின் செலவுகளும் அறவிடுவதற்காக ஹற்றன் நஷனல் வங்கி பீஎல்சீ மூலம் எனக்களிக்கப்பட்ட அதிகாரத்தின் பிரகாரம் கீழ் விபரிக்கப்பட்ட ஆதனம் என்னால் பகிரங்க ஏலம் மூலம் விற்பனை செய்யப்படும்.**

கீழ் விபரிக்கப்பட்ட காணிகளை 2018 ஆம் ஆண்டு சனவரி மாதம் 30 ஆந் திகதி முற்பகல் 11.30 மணிக்கு என்னால் பகிரங்க ஏலம் மூலம் அதே இடத்தில் விற்பனை செய்யப்படும்.

சப்பிரகமுவ மாகாணம், கேகாலை மாவட்டம், கன்தொலய பத்து பெலிகல் கோரளையில் ரம்புக்கனை மாவட்ட செயலாளர் தொகுதியில் இலக்கம் 75யு கெல்லாத்துகொட கிராம அலுவலர் எல்லையில் கெல்லவத்துகொட கிராமத்தில் உள்ள போகாமுலயேன காணிக்கு நிலஅளவையாளர் ஜே.ஆர்.எம்.பி.ஜயகொடியின் 2015.05.20 ஆந் திகதியுடைய வரைபடம் இலக்கம் 15 / 337இல் காண்பிக்கபட்ட லொட் 1.

இக்காணியின் விஸ்தீரணம்: 0ஏ.1றூ.15பே.
இக்காணியில் உள்ள கட்டிடம், மரங்கள், தாவரங்கள் எல்லாம் சேர்ந்து

மேற்சொல்லப்பட்ட காணித் துண்டான லொட் 1 இக் கீழ் விபரிக்கப்பட்ட காணிக்கு மீண்டும் அளந்து ஒன்றாக்கப்பட்ட காணியாகும்.

| | |
|---|---|
| லொட் 1 | 0ஏ.0றூ.26.5பே. |
| லொட் 2 | 0ஏ.0றூ.15பே. |

**தீர்மானம் பற்றிய விளம்பரத்துக்காக**.- 2017.11.17 ஆந் திகதியுடைய அரசாங்க வர்த்தமானியையும், 2017.11.23 ஆந் திகதியுடைய "லக்பிம", "டெயிலி மிரர்" மற்றும் "தினக்குரல்" ஆகிய பத்திரிகைகளையும் பார்க்கவும்.

**காணிக்குச் செல்லும் விதம்**. - கேகாலை நகரத்திலிருந்து பொல்காஹவெல ரோட்டில் 7 கி.மீற்றர் சென்று கெல்வத்துகொட சந்திக்கு செல்லும் முன் இக்காணியை வலதுபக்கம் காணமுடியும்.

**கட்டணங்கள் செலுத்தும் விதம்**.- உத்தேசக் கொள்வனவாளர் ஏல முடிவில் பின்வரும் கட்டணங்களை ஏலதாரருக்கு பணமாக செலுத்துதல் வேண்டும்:-

(1) கொள்முதல் விலையில் 10% (நூற்றுக்கு பத்து) ;
(2) உள்ளூர் அதிகார சபை வரி 1% (நூற்றுக்கு ஒன்று) ;
(3) ஏலதாரரின் தரகு விற்பனை விலையின் 2 1/2 % (நூற்றுக்கு இரண்டரை);
(4) விற்பனைச் சான்றிதழுக்கான நொத்தாரிசுக் கட்டணம் 2000 ரூபா ;
(5) இலிகிதர் கட்டணம் 500 ரூபா;
(6) விற்பனை சம்பந்தமாக செலவு செய்யப்பட்ட முழு விளம்பரச் செலவுகள்;

மிகுதி 90% ஏலத்திகதியிலிருந்து 30 நாட்களுக்குள் வங்கிக்கு செலுத்த வேண்டும். செலுத்த தவறினால் முற்பணம் 10% திருப்பி செலுத்தப்படமாட்டாது. காணி மீண்டும் ஏலத்தில் விடப்படும்.

**உரித்தாதனம் மற்றும் விபரங்களுக்கு**.- ''சிரேஷ்ட முகாமையாளர் (கடன் அறவிடுதல்), ஹற்றன் நஷனல் வங்கி பீஎல்சீ, இல. 479, ரீ. பி. ஜாயா மாவத்தை, கொழும்பு 10'' உடன் தொடர்பு கொள்ளவும். தொலைபேசி இல. : 011-2664664.

எல். பி. சேனாநாயக்க (சமாதான நீதவான்),
சிரேஷ்ட உத்தரவுபெற்ற ஏலதாரர், விலைமதிப்பீட்டாளர்,
நீதிமன்ற ஆணையாளர்.

இல. 200,
2 ஆவது மாடி,
புதுக்கடை வீதி,
கொழும்பு 12.
தொலைபேசி இல. : 011-2396520, 011- 2445393.
தொலைநகல் இல. : 011-2445393
மின்னஞ்சல்: senaservice @ sltnet.lk

1- 399

இலங்கை அரசாங்க அச்சுத் திணைக்களத்திற் பதிப்பிக்கப்பெற்றது.

கவனிக்க.- 2018.01.05 ஆந் திகதிய இலங்கைச் சனநாயக சோசலிசக் குடியரசு வர்த்தமானியின் பகுதி II பிரசுரிக்கப்படவில்லை.

# ශ්‍රී ලංකා ප්‍රජාතාන්ත්‍රික සමාජවාදී ජනරජයේ ගැසට් පත්‍රය
# இலங்கைச் சனநாயக சோசலிசக் குடியரசு வர்த்தமானப் பத்திரிகை

අංක 2054 - 2018 ජනවාරි මස 12 වැනි සිකුරාදා - 2018.01.12

2054 ஆம் இலக்கம் - 2018 ஆம் ஆண்டு சனவரி மாதம் 12 ஆந் திகதி வெள்ளிக்கிழமை

(அரசாங்கத்தின் அதிகாரத்துடன் பிரசுரிக்கப்பட்டது)

# பகுதி III – காணிகள்

(ஒவ்வொரு மொழியின் ஒவ்வொரு பகுதியும் வெவ்வேறாக கோவை செய்து வைப்பதற்காகத் தனித்தனிப் பக்கங்களில் தரப்பட்டுள்ளன.)


| | பக்கம் |
|---|---|
| காணி நிர்ணய அறிவித்தல்கள் | - |
| முன்னறிவித்தல்கள் | - |
| இறுதிக் கட்டளைகள் | - |
| காணிச்சீர்திருத்த ஆணைக்குழுவின் அறிவித்தல்கள் | - |
| அரசாங்க அதிபர்களினால் காணி விற்பனைகள் | - |
| மேல் மாகாணம் | - |
| மத்திய மாகாணம் | - |
| தென் மாகாணம் | - |
| வட மாகாணம் | - |
| கிழக்கு மாகாணம் | - |
| வடமேல் மாகாணம் | - |
| வடமத்திய மாகாணம் | - |
| ஊவா மாகாணம் | - |
| சப்பிரகமுவ மாகாணம் | - |
| நிர்ணய உத்தியோகத்தர்களினாற் காணி விற்பனைகள் | - |
| மேல் மாகாணம் | - |
| மத்திய மாகாணம் | - |
| தென் மாகாணம் | - |
| வட மாகாணம் | - |
| கிழக்கு மாகாணம் | - |
| வடமேல் மாகாணம் | - |
| வடமத்திய மாகாணம் | - |
| ஊவா மாகாணம் | - |
| சப்பிரகமுவ மாகாணம் | - |
| காணி கொள்வனவு பற்றிய அறிவித்தல்கள் | - |
| காணி அபிவிருத்திக் கட்டளைச்சட்ட அறிவித்தல்கள் | 8 |
| காணி மீட்டல் பற்றிய அறிவித்தல்கள் | - |
| நானாவித காணி அறிவித்தல்கள் | 8 |
| சிறுநிலச் சொந்தக்காரர் திட்டத்தின்கீழ் அறிவித்தல்கள் | - |


**கவனிக்க.-** (i) நிமல் ரூபசிங்ஹ நட்புறவு மன்றம் (கூட்டிணைத்தல்) சட்டமூலம் 2018, சனவரி மாதம் 05 ஆந் திகதிய இலங்கைச் சனநாயக சோசலிசக் குடியரசு வர்த்தமானியின் பகுதி II இற்கு குறைநிரப்பியாக வெளியிடப்படுகின்றது.

(ii) பொத்துவடவன மகா விகாரை மன்றம் (கூட்டிணைத்தல்) சட்டமூலம் 2018, சனவரி மாதம் 05 ஆந் திகதிய இலங்கைச் சனநாயக சோசலிசக் குடியரசு வர்த்தமானியின் பகுதி II இற்கு குறைநிரப்பியாக வெளியிடப்படுகிறது.

**வாராந்த வர்த்தமானிகளிற் பிரசுரிப்பதற்கான அறிவித்தல்கள் ஏற்றுக்கொள்ளல் சம்பந்தமான**

**முக்கிய அறிவித்தல்கள்**

இலங்கைச் சனநாயக சோசலிசக் குடியரசு வாராந்த வர்த்தமானப் பத்திரிகைகளின் இறுதியில், ஒவ்வொரு மாதத்தின் முதல் வாரத்தின், வாராந்த வர்த்தமானப் பத்திரிகைகளில் பிரசுரிக்கப்படுவதற்கான அறிவித்தல்கள் ஏற்றுக்கொள்ளப்படும் இறுதித் திகதியும் நேரமும் சம்பந்தமான அறிவித்தல்களுக்கு கவனம் கோரப்படுகின்றது.

வாராந்த வர்த்தமானிகளிற் பிரசுரிக்கப்படுவதற்கான அறிவித்தல்கள் ஏற்றுக்கொள்ளப்படும் இறுதித் தினம் அவை **வர்த்தமானியில் பிரசுரமாகும் திகதிக்கு இரண்டு வாரங்களுக்கு முந்திய வெள்ளிக்கிழமை, நண்பகல் 12.00 மணியாகும்.** இறுதித் திகதியும் நேரமும் குறிப்பிடும் அறிவித்தல்களான, பதவி-வெற்றிடங்கள் மற்றும் பரீட்சைகளுக்கு விண்ணப்பம் கோரும் அறிவித்தல்கள், கேள்விப்பத்திர அறிவித்தல்கள் அத்துடன் ஏல விற்பனைத் திகதியும் நேரமும் குறிப்பிடும் அறிவித்தல்கள் என்பன அவ்வவ் அறிவித்தல்களில் உள்ள விடயங்களில் அக்கறை செலுத்துவோர் ஆக்கபூர்வமாக பயனுறும் வகையில் அவை பிரசுரிக்கப்படுவதற்காக அரசாங்க அச்சகத்துக்கு அனுப்பிவைக்கப்படும் திகதியிலிருந்தும் அத்துடன் அவை பிரசுரமாகும் திகதியிலிருந்தும் போதிய கால அவகாசம் கொண்டதாக தயாரிக்கப்பட்டு அனுப்பிவைக்கப்பட வேண்டும் என சகல அரசாங்க திணைக்களங்கள், கூட்டுத்தாபனங்கள், சபைகள் ஆகியன அறிவுறுத்தப்படுகின்றன. அறிவித்தல்கள் தொடர்பிலான பிழைதிருத்தங்கள் சம்பந்தமாக செய்யப்படும் முறைப்பாடுகள் மற்றும் விசாரணைகள் என்பன வர்த்தமானியில் குறிப்பிட்ட அறிவித்தல்கள் பிரசுரமாகிய திகதியிலிருந்து மூன்று மாதங்கள் கழிந்த பின்னர் ஏற்றுக்கொள்ளப்படமாட்டா என்பதனை கவனத்திற்கொள்ளவும்.

வர்த்தமானப் பத்திரிகையில் பிரசுரமாகும் சகல அறிவித்தல்களும், அவை பிரசுரமாகும் திகதிக்கு **இரண்டு வாரங்களுக்கு முன்னர்**, அதாவது 2018, பெப்புருவரி மாதம் 02 ஆந் திகதி வெள்ளிக்கிழமை பிரசுரிக்கப்படவேண்டிய அறிவித்தல்கள் 2018, சனவரி மாதம் 19 ஆந் திகதி நண்பகல் 12.00 மணிக்கு அல்லது அதற்கு முன்னர் கிடைக்கக்கூடியவாறு தபால் மூலம் அல்லது நேரில் சேர்ப்பிக்கப்பட வேண்டும்.

**2006 ஆம் ஆண்டின் 19 ஆம் இலக்க, இலத்திரனியல் கொடுக்கல் வாங்கல் சட்டத்தின் 9 ஆம் பிரிவு**

"ஏதேனும் பிரகடனம், விதி, ஒழுங்கு விதி, கட்டளை, துணை விதி, அறிவிப்பு அல்லது வேறு விடயம் வர்த்தமானியில் வெளியிடப்பட வேண்டுமென ஏதேனும் சட்டம் அல்லது சட்டவாக்கம் ஏற்பாடு செய்யுமிடத்து, அப்போது, அத்தகைய விதி, ஒழுங்குவிதி, கட்டளை, துணை விதி, அறிவிப்பு அல்லது வேறு விடயம் இலத்திரன் வடிவத்தில் வெளியிடப்படின், அத்தகைய தேவைப்பாடு திருப்திப்படுத்தப்பட்டுள்ளதாகக் கருதப்படுதல் வேண்டும்."

**கங்கானி லியனகே,**
அரசாங்க அழுத்தகர் (பதில்).

அரசாங்க அச்சுத் திணைக்களம்,
கொழும்பு 8,
2018 ஆம் ஆண்டு சனவரி மாதம் 01 ஆந் திகதி.
இவ்வர்த்தமானியை www.documents.gov.lk எனும் இணையத்தளத்திலிருந்து பதிவிறக்கம் செய்ய முடியும்.

7- B81242-353(2018/01)

# காணி அபிவிருத்திக் கட்டளைச்சட்ட அறிவித்தல்கள்

*இணைப்பு 9*

## காணி அபிவிருத்திக் கட்டளைச் சட்டத்தின் 19 ஆவது பிரிவின் (4) ஆவது உபபிரிவின் கீழ் வழங்கப்படும் வழங்கள் பத்திரத்தை இரத்துச் செய்தல் (104 ஆம் பிரிவு) தொடர்பான அறிவித்தல்

மத்திய மாகாணத்தில், மாத்தளை நிருவாக மாவட்டத்தில் மாத்தளை பிரதேச செயலாளர் பிரிவின் மாத்தளை பிரதேச செயலாளர் கலஹே பாண்டி கோராளகே லங்கா பிரியானி மதுவந்தி ஆகிய நான், காணி அபிவிருத்தி கட்டளைச் சட்டத்தின் 19(4) ஆம் உப பிரிவின் கீழ் அதிஉத்தமராம் சனாதிபதி அவர்களினால், 1986.04.22 ஆந் திகதி வழங்கப்பட்ட இலக்கம் මාතලේ/ප්‍ර / 6936 கொண்ட வழங்கற் பத்திரத்தின் உரித்தாளரான இல. 81, துனுகேவத்த, பலாபத்வல, மாத்தளையில் வதியும் திரு. என். ஜீ. சுபரத்னவுக்கு கையளிக்கப்பட்ட, மாத்தளை மாவட்ட காணிப்பதிவாளர் அலுவலகத்தில் இலக்கம் ඳ 206/1162/91 இன் கீழ் 1991.11.19 ஆந் திகதி பதிவுசெய்யப்பட்டுள்ள, கீழே அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள காணிக்கு பின் உரித்தாளராவதற்கு சட்டரீதியான உரித்தாளரொருவர் இல்லாததனால் அல்லது உரித்தாளரொருவர் இருந்தாலும் அவர் பின் உரித்தாளராவதற்கு விருப்பமின்மையினால் பின் உரித்தாளரொருவராவதற்கு யாரும் இல்லையென்ற விபரம் கிடைக்கப்பெற்றுள்ளதனால் குறித்த வழங்கற் பத்திரம் மேற்குறித்த சட்டத்தின் 104 ஆம் பிரிவின் கீழ் இரத்துச் செய்வதற்கு நடவடிக்கை மேற்கொள்ளப்படுகின்றதென்பதனை இத்தால் அறிவிக்கின்றேன். இது தொடர்பாக ஏதும் எதிர்ப்புக்கள் இருப்பின் அவற்றை 2018.01.31 ஆந் திகதிக்கு முன்னதாக எழுத்து மூலம் எனக்கு அறிவித்தல் வேண்டும்.

### அட்டவணை

மாத்தளை நிருவாக மாவட்டத்தில் மாத்தளை பிரதேச செயலாளர் பிரிவில் கம்பஹசிய பத்துவில் தொரகும்புர கிராம அலுவலர் பிரிவில் துனுகேவத்த கிராமத்தில் அமைந்துள்ள, மாத்தளை சிரேஷ்ட நில அளவையாளர் பொறுப்பில் இருக்கின்ற, நில அளவையாளர் நாயகத்தினால் தயாரிக்கப்பட்ட வெளிக்கள பத்திர இலக்கம் 48/19/1 ஆ. வ. மா/677 கொண்ட துண்டு பிரிக்கும் வரைபடத்தில் நில அளவையாளர் நாயகத்தினால் தயாரிக்கப்பட்ட கோட்டுப்படத்தில் 81 ஆம் இலக்க காணித்துண்டெனக் காட்டப்பட்டுள்ள, 0.139 ஹெக்டயார் விஸ்தீரணங் கொண்ட அரச காணி– தொஸ்தரவத்த (சோமாஸ் லேண்ட்) எனும் காணித்துண்டின் எல்லைகள் - வடக்கில் : வீதி; கிழக்கில்: துண்டு இலக்கம் 82; தெற்கில் : துண்டு இலக்கம் 87 ; மேற்கில் : அரச காணி.

கே. பி. கே. எல். பி. மதுவந்தி,
பிரதேச செயலாளர்,
மாத்தளை.

2017, நவெம்பர் 22.

01- 403

# நானாவித காணி அறிவித்தல்கள்

காணி ஆணையாளர் நாயகத்தின்
இல. : 4/10/54859
மாகாணக் காணி ஆணையாளாரின்
இல. : ப.இ.கொ/6/1/களு/வளல்/553

## முடிக்குரிய காணிப் பிரமாணங்களின் 21 (2) ஆம் பிரிவின் கீழ் அறிவித்தல்

களுத்துறை மாவட்டம் வளல்லாவி பிரதேச செயலாளர் பிரிவுக்குட்பட்ட இல. 848 பீ கிராம அலுவலர் பிரிவைச் சேர்ந்த லிஹினியாவ எனும் கிராமத்தில் அ. க. பி. 106 ஆம் இலக்க சுவடு வரைபடத்தில் காணித்துண்டு இலக்கம் 369 எனக் காட்டப்பட்டுள்ளதும் 05 ஏக்கர், 01றூட், 22 பேச் விஸ்தீரண முள்ளதுமான அரச காணியை வாணிப நோக்கத்திற்காகக் குத்தகைக்கு தருமாறு கேட்டுத் திரு. ஹவ்பே விதானலாகே சந்ரசிறி ஜயனந்த விண்ணப்பித்துள்ளார் என இத்தால் அறியத்தரப் படுகிறது.

02. விண்ணப்பிக்கப்பட்டுள்ள காணியின் எல்லைகள் பின்வருமாறு :-

வடக்கு : இவ்வரைபடத்தில் காணித்துண்டு இலக்கம் 368;
கிழக்கு : கால்வாய் ஒதுக்கு மற்றும் காணித்துண்டு இலக்கம் 227;
தெற்கு : காணித்துண்டு இலக்கம் 339;
மேற்கு : கால்வாய் ஒதுக்கு மற்றும் காணித்துண்டு இலக்கம் 338.

03. குறித்த காணி குத்தகைக்கு வழங்கப்படக் கூடியதாய் இருக்கின்றது. ஆகவே அரசினால் அங்கீகரிக்கப்பட்ட நிபந்தனை கட்கும் கீழ்க் காணப்படும் நிபந்தனைகட்கும் அமைவாக இக்காணியை குத்தகைக்கு வழங்க அரசு முடிவு செய்துள்ளது.

(அ) **குத்தகைக் காலம்**.- முப்பது (30) வருடங்கள் (2017.11.27 தொடக்கம் முன்னோக்கி)

**வருடாந்தக் குத்தகை**.- குத்தகையானது அமுல்படுத்தும் 2017 ஆம் வருடத்தின் காணியின் மதிப்பீட்டு பெறுமதியானது ரூபா ஐந்து மில்லியனை விட (ரூபா ஐந்து மில்லியன் 5,000,000) குறையும் சந்தர்ப்பங்களில் பிரதான விலை மதிப்பீட்டாளரினால் விலை மதிப்பு அடிப்படையில் அவ் வருடத்திற்கான சந்தைப் பெறுமதியின் 2% ஆகும். குத்தகை அமுல் படுத்தும் வருடத்தின் காணியின் மதிப்பீட்டு பெறுமதி ரூபா ஐந்து மில்லியனை விட (ரூபா ஐந்து மில்லியன் 5,000,000) தாண்டும் சந்தர்ப்பத்தில் பிரதான மதிப்பீட்டாளரினால் விலை மதிப்பீட்டாளரின் விலை

மதிப்பு அடிப்படையில் அவ்வருடத்திற்கான காணியின் சந்தைப் பெறுமதியின் 4% ஆகும். இக்குத்தகைப் பணமானது எல்லா ஐந்து வருடங்களுக்கு ஒரு முறை திருத்தியமைக்கப்பட வேண்டும் என்பதுடன் அதன் முந்தைய வருடத்தின் இறுதியில் அறவிடப்பட்ட வருடாந்த குத்தகைப் பணத்திற்கு 20% சேர்க்கப்பட வேண்டும்.

**தவணைப்பணம்** : தவணைப்பணம் அறவிடப்பட மாட்டாது.

(ஆ) குத்தகைக்காரரினால் இக்காணி வாணிப நோக்கம் தவிர்ந்த வேறெந்த நோக்கத்திற்காகவும் பாவிக்கப்படல் கூடாது.

(இ) குத்தகைக்காரரினால் குத்தகை ஆரம்பித்த திகதியி லிருந்து ஒருவருட காலத்திற்குள்ளாக பிரதேசச் செய லாளரின் மனம் திருப்தியுறும் வண்ணம் இக்காணி அபிவிருத்தி செய்யப்படல் வேண்டும்.

(ஈ) பிரதேசச் செயலாளர் மற்றும் வேறு நிறுவனங்களினால் விதிக்கப்படும் ஏனைய விசேட நிபந்தனைகட்கும் இக்குத்தகை கட்டுப்படும்.

(உ) கட்டப்பட்டுள்ள கட்டடங்கள் சிறந்த முறையில் பேணப்படல் வேண்டும்.

(ஊ) காணி குத்தகைக்கு வழங்கப்பட்டுள்ளபோது குத்தகைக்காரர் குத்தகை வழங்கப்பட்ட நோக்கத்தை குறிப்பிட்ட காலப்பகுதிக்குள் பூர்த்தி செய்யாத பட்சத்தில் குத்தகை இரத்துச் செய்ய நடவடிக்கை எடுக்கப்படும்.

(எ) 2017.11.27 ஆந் திகதியிலிருந்து குறைந்தது 05 வருடங்கள் நிறைவு பெறும் வரையினும் இக்காணி குத்தகைக்குப் பெற்ற நோக்கத்தை நிறைவுசெய்வதற்கான கைமாற்றம் அல்லது கீழ்க்குத்தகைக்கு விடுதல் அல்லது கைமாற்றம் செய்வதற்கு அனுமதியளிக்கப்படமாட்டாது.

(ஏ) குத்தகைப் பணம் ஒழுங்காக கொடுபடல் வேண்டும். அவ்வாறு கொடுபடாத பட்சத்தில் ஒப்பந்தம் தானாகவே இரத்தாகிவிடும்

04. இக் காணி குத்தகைக்கு வழங்கப்படக்கூடாது என்பதற்குத் தகுந்த காரணங்களை வர்த்தமானியில் இவ்வறிவித்தல் வெளியிடப்பட்ட தினத்திலிருந்து ஆறு வாரங்களுக்குள்ளாக எனக்குக் கிடைக்கதக்கதாக எழுதி அனுப்பாதுவிடின் இக்குத்தகை வழங்கப்படும்.

டி. ரி. எம். ஜயதிலக,
உதவிக் காணி ஆணையாளர்,
காணி ஆணையாளர் நாயகத்திற்காக.

காணி ஆணையாளர் நாயகத்தின் திணைக்களம்,
"மிஹிகத்த மெதுர",
காணிச் செயலகம்,
இல. 1200/6, ரஜமல்வத்த வீதி,
பத்தரமுல்லை,
2018, சனவரி 12.

01-259

---

காணி ஆணையாளர் நாயகத்தின்
இல. : 4/10/44837
மாகாணக் காணி ஆணையாளாரின்
இல. : சிபிசி/எல்சி/எல்டி/4/1/21/72

## முடிக்குரிய காணிப் பிரமாணங்களின் 21 (2) ஆம் பிரிவின் கீழ் அறிவித்தல்

மாத்தளை மாவட்டம், மாத்தளை பிரதேச செயலாளர் பிரிவுக்குட்பட்ட தியபுபுல கிராம அலுவலர் பிரிவைச் சேர்ந்த ஹில்கொல்ல எனும் கிராமத்தில் அமைந்துள்ளதும் எம்ஏ/எம்ரிஎல்/ 2014/262 ஆம் இலக்க சுவடு வரைபடத்தில் காணித்துண்டு இலக்கம் C மற்றும் E எனக் காட்டப்பட்டுள்ளதும் சுமார் - ஏக்கர் - றூட் 9.6 பேச் - ஹெக்டேயர் விஸ்தீரணமுள்ளதுமான அரச காணியை பழைய மாணவர் சங்கத்தின் நோக்கத்திற்காகக் குத்தகைக்கு தருமாறு கேட்டு மா/அரசினர் விஞ்ஞானக் கல்லூரியின் பழைய மாணவர் சங்கம் விண்ணப்பித்துள்ளது என இத்தால் அறியத் தரப்படுகிறது.

02. விண்ணப்பிக்கப்பட்டுள்ள காணியின் எல்லைகள் பின் வருமாறு :-

காணித்துண்டு இலக்கம் C
வடக்கு : எம். சி. வீதிக்கு ஒதுக்கிய காணி ;
கிழக்கு : தியபுபுல ஓய நெடுகிலும் ஒதுக்கிய காணி ;
தெற்கு : எம்ஏ/எம்ரிஎல்/2014/262 இல் காணித்துண்டு D ;
மேற்கு : எம். சி. வீதிக்கு குறுக்கே ஒதுக்கிய காணி.

காணித்துண்டு இலக்கம் E
வடக்கு : எம்ஏ/எம்ரிஎல்/2014/262 இல் காணித்துண்டு D ;
கிழக்கு : தியபுபுல ஓய நெடுகிலும் ஒதுக்கிய காணி ;
தெற்கு : கால்வாய் நெடுகிலும் ஒதுக்கிய காணி ;
மேற்கு : எம். சி. வீதிக்கு ஒதுக்கிய காணி.

03. குறித்த காணி குத்தகைக்கு வழங்கப்படக் கூடியதாய் இருக்கின்றது. ஆகவே அரசினால் அங்கீகரிக்கப்பட்ட நிபந்தனை கட்கும் கீழ்க் காணப்படும் நிபந்தனைகட்கும் அமைவாக இக்காணியை குத்தகைக்கு வழங்க அரசு முடிவு செய்துள்ளது.

(அ) **குத்தகைக் காலம்** .- ஐந்து (05) வருடங்கள் (2017.11.21 தொடக்கம் முன்னோக்கி 05 வருடங்கள்)

**வருடாந்தக் குத்தகை**.- பிரதான மதிப்பீட்டாளரினால் மதிப்பீடு செய்யப்பட்ட 2017 ஆம் வருடத்திற்கான அபிவிருத்தி செய்யப்படாத பெறுமதியின் 1/ 2% வருடாந்தக் குத்தகையாகக் கொடுபடல் வேண்டும்.

தவணைப்பணம்.- இல்லை

(ஆ) குத்தகைக்காரரினால் குத்தகை ஆரம்பித்த திகதியிலிருந்து ஒருவருட காலத்திற்குள்ளாக பிரதேசச் செயலாளரின் மனம் திருப்தியுறும் வண்ணம் இக்காணி அபிவிருத்தி செய்யப்படல் வேண்டும்.

(இ) குத்தகைக்காரரினால் இக்காணி மா / அரசினர் விஞ்ஞானக் கல்லூரியின் பழைய மாணவர் சங்கத்தின் நோக்கம் தவிர்ந்த வேறெந்த நோக்கத்திற்காகவும் பாவிக்கப்படல் கூடாது.

(ஈ) பிரதேசச் செயலாளர் மற்றும் வேறு நிறுவனங்களினால் விதிக்கப்படும் ஏனைய விசேட நிபந்தனைகட்கும் இக்குத்தகை கட்டுப்படும்.

(உ) கட்டப்பட்டுள்ள கட்டடங்கள் சிறந்த முறையில் பேணப்படல் வேண்டும்.

(ஊ) காணி குத்தகைக்கு வழங்கப்பட்டுள்ளபோது குத்தகைக் காரர் குத்தகை வழங்கப்பட்ட நோக்கத்தை குறிப்பிட்ட காலப்பகுதிக்குள் பூர்த்தி செய்யாத பட்சத்தில் குத்தகை இரத்துச் செய்ய நடவடிக்கை எடுக்கப்படும்.

(எ) 2017.11.21 ஆந் திகதியிலிருந்து குறைந்தது 05 வருடங்கள் நிறைவு பெறும் வரை குத்தகையின் நோக்கத்தை நிறைவேற்றுதல் தவிர்ந்த வேறு கீழ்க்குத்தகை அல்லது கைமாற்றம் அனுமதியளிக்கப்படமாட்டாது.

(ஏ) குத்தகைப் பணம் ஒழுங்காக கொடுபடல் வேண்டும். அவ்வாறு கொடுபடாத பட்சத்தில் ஒப்பந்தம் தானாகவே இரத்தாகிவிடும்.

04. இக் காணி குத்தகைக்கு வழங்கப்படக்கூடாது என்பதற்குத் தகுந்த காரணங்களை வர்த்தமானியில் இவ்வறிவித்தல் வெளியிடப்பட்ட தினத்திலிருந்து ஆறு வாரங்களுக்குள்ளாக எனக்குக் கிடைக்கதக்கதாக எழுதி அனுப்பாதுவிடின் இக்குத்தகை வழங்கப்படும்.

நுவனி சுதுசிங்க,
உதவிக் காணி ஆணையாளர்,
காணி ஆணையாளர் நாயகத்திற்காக.

காணி ஆணையாளர் நாயகத்தின் திணைக்களம்,
"மிஹிகத்த மெதுர",
காணிச் செயலகம்,
இல. 1200/6, ரஜமல்வத்த வீதி,
பத்தரமுல்லை,
2018, சனவரி 12.

01-260